# மகாநதி

உன்னதமான ஒரு தமிழ் சினிமா பார்த்து ரொம்ப நாளாகி விட்டது. மகாநதி - 'அக்கு, கமலின் காண்ட்ரிப்யூஷன். முதற்கண் வாழ்த்தி விடலாம். ஆரம்பத்தில் மட்டுமல்ல; வருஷக் கடைசியிலும் கிடைக்கப் போகிற அவார்டுகளுக்குச் சேர்த்து.

முதலில் கதையைப் பார்க்கலாம். இத்தனை சோகம் ஒரு சினிமாவில் இருந்தால் யாரும் எழுந்து வந்து விடுவார்கள். கட்டிப் போட்டிருப்பது கமலின் நடிப்பு. கிராமத்துப் பெரிய மனுஷர் - வீடு, நிலத்தை விற்று சிட்டுக் கம்பெனி ஆரம்பிக்கிறார். வில்லனிடம் power of Attorney எழுதிக் கொடுக்கிறார். ('இடிப்பது' இங்கு மட்டுமே) நிகழ்ச்சிகளின் கொடூரம் படிப்படியாய் அதிகரித்து, அவர் பெண்ணைக் கல்கத்தா சிவப்பு விளக்குப் பகுதியில் கொண்டு தள்ளுகிறது. பிள்ளையைக் கழைக்கூத்தாடி ஆக்குகிறது. இவரை ஜெயிலில் தள்ளுகிறது.

மேற்படி அடுக்கடுக்கான, மிகைப்படுத்தப்படாத, இயல்பாய் நேரும் சம்பவங்கள் படத்தின் மிகப் பெரிய பலம்.

இன்னொரு விஷயம், அந்த சிறைச்சாலை நிஜங்கள். (சென்லாருக்குச் சீர்திருத்த உத்வேகம் வந்து விட்டதா?) வார்டனின் லீலைகள். காவலரின் கயமை இத்யாதி, இத்யாதி.

தூக்கத்தில் உளறும் அந்தச் சின்னப் பெண்ணுக்கு நேரும் விதி யாரையும் கலங்கச் செய்யும். மகாநதியாக உருவகப்படுத்தப்பட்டிருக்கும் காலம், எப்படியெல்லாம் அவளை அலைக்கழிக்கிறது?

கல்கத்தாவின் 'அந்த' ஏரியாவின் சந்துபொந்துகளில் புகுந்து எழுந்திருக்கும் கேமராவுக்கு ராயல் சல்யூட் அடிக்கலாம்.

ஸ்ரீராமின் சிஷ்யர். பாய்ந்திருப்பது முப்பத்திரண்டு அடி.

பூர்ணம் விஸ்வநாதன், வெறுமனே ஷோ காட்ட வந்து போகும் சுகன்யா, ஒரிருமுறை வந்தாலும் ஒட்டிக் கொள்ளும் ராஜேஷ், மீண்டும் தன்னை நிரூபித்திருக்கும் மாஸ்ட்ரோ... இத்தனை பேரையும் ஓரம்கட்டி இமயம் தொட்டிருக்கிறார் கமல்.

இது மகாநதி வருடம்.

- ஆர்.பி.ஆர்.





* பிரார்த்தனை வகுப்புகள்

# தனிச் சிறப்புடன் ஒரு தமிழ்ப் பள்ளி!

தமிழகத்தின் முதல் தமிழ் மீடியம் மெட்ரிகுலேஷன் பள்ளி பொள்ளாச்சியில்தான் இருக்கிறது : 'ருக்மணியம்மாள் மெட்ரிகுலேஷன் பள்ளி. (தமது தாயாரின் நினைவாக, அவரது பெயரிலேயே இப்பள்ளியை நிறுவியிருப்பவர் நா. மகாலிங்கம்) "தாய் மொழியில் கல்வி வழங்க வேண்டும் என்று தோன்றியதன் விளைவுதான் இப் பள்ளி" என்பவர் முதல்வர் பொன். லோக நாதன்.

"புதுப் பாடத்திட்டத்தின்கீழ் மெட்ரிகுலேஷன் மற்றும் தமிழக அரசின் பாடங்கள் இன்று ஓரளவுக்குச் சமமாகி விட்டன என்பது உண்மை தான். எனினும் மக்களுக்கு இன்னும் மெட்ரிகுலேஷன் மயக்கம் தீரவில்லை. அதனால்தான் தமிழ் மெட்ரிகுலேஷன் ஆரம்பிக்கும் எண்ணம் ஐயாவுக்கு வந்தது" என்கிறார் இப்பள்ளியின் தாளாளர் அரியநாயகம். ஐயா என்பது நா. மகாலிங்கம்.

1991 இல் தொடங்கப்பட்டுள்ள இப்பள்ளியில் 6 – 10 வகுப்புகள் உள்ளன. மெட்ரிகுலேஷன் பாடங்கள் யாவும் தமிழில் – இப்பள்ளி

# மக்கள் பணியில் பிரேஷிதா!

"சினிமாவில் காட்டும் கிராமத்துப் பெண்களைப் போல் 'ஒன்றுமே தெரியாதவர்களாக நாங்களும் இருந்திருப்போம். எங்கள் வாழ்வில் பிரேஷிதா நிகழ்த்தியிருக்கும் மாறுதல்களைப் பட்டியல் போட முடியாது!" என்கிறார்கள் பொள்ளாச்சியைச் சுற்றியுள்ள கிராமப் புறங்களில் வசிக்கும் பெண்கள்.



* வர்கீஸ்

இந்த வட்டார மக்களின் வளர்ச்சிக்குப் பணியாற்றும் நிறுவனம் 'பிரேஷிதா சேவா சங்கம்'. கத்தோலிக்கப் பின்னணியுள்ள இந்நிறுவனம் கல்விப்பணி, சமூகப் பணி, மருத்துவம், சுகாதாரம், சுயதொழில், வேலை வாய்ப்பு என்று சுற்றுப் புறங்களில் வசிக்கும் பின் தங்கிய மக்களுக்கு இலவச சேவை செய்து வருவதால் இப்பகுதியில் பெரும் நற்பெயர் பெற்றுள்ளது.

ஒவ்வொரு பஞ்சாயத்தாகத் தேர்ந்தெடுத்து வீடு அமைத்துத் தருதல், குடிநீர்க் குழாய் நிறுவுதல் போன்ற உபயோகமான காரியங்களையும் செய்து வருகிறது.

இவ்வமைப்பின் செயல்பாடுகள் பற்றி, அமைப்பாளர் மறைதிரு வர்கீஸ் கொக்காடன் நம்மிடம் பேசினார்.

பிரேஷிதா நிறுவனத்தின் நலப்பணிகளுக்கு, ஜெர்மனியில் உள்ள ஒரு தனியார் நிறுவனமும் ஜெர்மன் அரசும்

* ஸ்டெபிலைஸர்கள் உருவாகின்றன



* நூல் தொழில்....



ஷன் பாடங்கள் யாவும் தமிழில் - இப்பள்ளி ஆசிரியர்களாலேயே மொழிபெயர்க்கப்படுகின்றன! இவ்வாண்டு, முதல் பாட்ச் 26 மாணவர்கள் தமிழில் முதன் முறையாக மெட்ரிக் தேர்வு எழுத உள்ளனர்! இவர்களுக்காகத் தமிழ் வினாத்தாள்கள் தயாரிக்கப்பட்டுள்ளன!

இங்கிலீஷ் மீடியம் மெட்ரிகுலேஷன் படிப்புக்கு ஆகிற செலவில் மூன்றில் ஒரு பங்கே தமிழ் மீடியத்துக்கு ஆகிறது என்பது மிகப் பெரிய அனுகூலம்.

இப்பள்ளி தொடங்குவதற்கு முன் பல கல்வி அறிஞர்கள், உயர் அதிகாரிகள் சேர்ந்து ஒரு கருத்தரங்கம் மாதிரி நடத்தி, இம்முயற்சி எத்தனை தூரம் வெற்றி பெறும் என்பது குறித்து ஆய்வு நடத்தியுள்ளனர். தாய்மொழி வழிக் கல்வி என்கிற மிகப் பெரிய பிளஸ் பாயிண்ட், இந்நிறுவனத்தின் வெற்றிக்குப் பின்பலமாக இருந்திருக்கிறது.

மேலும், "வெறும் ஏட்டுக் கல்வி பிரயோஜனமில்லை என்பதால் தோட்டக்கலை, சர்க்காவில் நூல் நூற்பது, புக் பைண்டிங், ஒயரிங் போன்ற தொழில்கள் வகுப்புவாரியாக இங்கு போதிக்கப்படுகின்றன" என்கிறார் பொன். லோ.

"இன்று பிள்ளைகளுக்கு நம் பாரம்பரியம் மறந்துவிட்டது; அல்லது தெரியவில்லை. இதை ஒரு முக்கிய விஷயமாகக் கருதி கலாசாரம், பண்பாடு, புராண இதிகாசங்கள் இவற்றையும் இங்கு கட்டாயப் பாடமாக வைத்திருக்கிறோம். ஜாதி, மத வித்தியாசங்கள் ஏதுமின்றி சர்வமதப் பண்டிகைகள் இங்கே கொண்டாடப்படுகின்றன. யுக்தி வகுப்புகளும் உண்டு" என்கிறார் தாளாளர் அரியநாயகம்.


அரியநாயகம்


பொன். லோகநாதன்

சுற்றுப்புற கிராமங்களிலிருந்தெல்லாம் இப்போது இப்பள்ளியின் மீது மக்கள் படையெடுக்கிறார்கள். தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்தும் தற்போது தமிழ் மெட்ரிகுலேஷன் ஆரம்பிப்பதற்கு இங்கு வந்து ஆலோசனை கேட்டுப் போகிறார்கள்!

- ஞானம்

---

இந்திய அரசும் பொருள் உதவி புரிகின்றன. நற்பணிகளை எல்லாம் நடைமுறைப்படுத்த இவர்களே இளைஞர் மன்றங்களும் மாதர் சங்கங்களும் நடத்தி வருவது குறிப்பிட வேண்டிய விஷயம்.

பிரேஷிதாவின் செயல்பாடுகளின் சிகரம் என்று, இவர்களின் பெண்கள் நலப்பணிகளைச் சொல்லலாம். கிராமப்புறங்களில் அதிகம் படிப்பறிவில்லாத பெண்களைத் திரட்டி அவர்களுக்குத் தொழிற் பயிற்சி தந்து உத்தியோகமும் இவர்களே தருகிறார்கள். படத்தில் நீங்கள் காணும் பெண்கள் ஸ்டெபிலைஸர் தயாரிப்பில் ஈடுபட்டிருக்கிறார்கள். கைத்தொழிலாக இங்கே தயாராகும் ஸ்டெபிலைஸர்கள் வி-கார்டு நிறுவனத்துக்கு சப்ளை செய்யப்படுகிறது. இந்தப் பெண்களும் வாழ்க்கையில் 'ஸ்டெபிலைஸ்' ஆகி விடுகிறார்கள்!

தவிரவும் உள்ளூரின் பிரசித்தி பெற்ற தென்னை நார்த்தொழில்கள். முந்நூறு பெண்களுக்குமேல் இதுவரை இத்திட்டத்தின் மூலம் பயன் பெற்றுள்ளனர்.

- பரத்

வாசகர் தகவல் :
பொன்ராஜ்குமார்

## அடுத்த இதழில்....

●● **சர்வதேச அதலெடிக்ஸ் : இந்தியா என்ன சாதிக்கப் போகிறது?**
- சிறப்புக் கட்டுரை

●● **ஹோமியோபதி : ஹோம்லி மருத்துவம்!**

● ● ●

**13.2.94 இதழுடன்**

**'தலைவலிக்கு டாட்டா!'**
- இலவச இணைப்பு!

ஒவ்வோர் இல்லத்திலும்
இருக்க வேண்டிய மருத்துவக் குறிப்பேடு



* சூலக்கல் மாரியம்மன் ஆலயம்...

# அருள் சுரக்கும்

ஓம் என்று சொல்லுவோம்!

சுத்தமான வெண் உடை அணிந்து, விபூதி குங்கும சகிதமாய் ஆண்கள் வழிபடுகிறார்கள். தளரத் தளரப் பின்னிய ஈர முடியுடன் மஞ்சள் துலங்கும் தாய்க்குல பக்திக்கும் பஞ்சமில்லை. குளிக்காமல் கோயிலுக்கு வரும் பட்டண நாகரிகம் இன்னமும் பொள்ளாச்சிக்குப் பரவவில்லை.

இவர்களின் வழிபாட்டில் சூலக்கல் மாரியம்மன், மாசாணியம்மன், பொள்ளாச்சி மாரியம்மன் எல்லாம் முக்கியமானவர்கள். வெகு தூரத்திலிருந்து எல்லாம் வேண்டிக் கொண்டும், நேர்ந்து கொண்டும் இக்கோவில்களுக்குப் படைசூழ வந்து பக்திப் பரவசத்தில் திளைக்கிறார்கள். கூடம் ஏற்றுகையில் மெய்சிலிர்க்க, அம்மன் பெயரை உரக்கக் கூப்பிட்டு வழிபடுகிறார்கள். குறைக்கும் நிறைக்கும் கோவில்களில் பிரார்த்தனைகள்.

சூலக்கல் மாரியம்மன் கோவில் முந்நூறு வருடம் பழமையானது. 'தேவர் மகன்' கோவில் என்றால் உங்களுக்கு உடனே ஞாபகம் வரும். (கோவில் கதவை உடைத்து உள்ளே செல்லும் காட்சி.)

மாரியம்மன் சுயம்புவாய் உருவானவள். இப்போது கோவில் இருக்கும் இடம் முன்னர் காடு. அங்கே மாடுகள் மேய்ச்சலுக்கு வருவது வழக்கம். அப்படி வரும் மாடுகளில் ஒன்று சரியாக உச்சிவேளையில், அங்கிருந்த ஒரு சுயம்புச் சிலை மேல் பாலைப் பீய்ச்சியடிப்பதைப் பார்த்திருக்கிறார்கள். அதைத் தடுக்க, அந்த மாட்டின் சொந்தக்காரன் விரட்டியிருக்கிறான். அவசரத்தில் அந்த மாடு சிலை மேல் கால் வைக்க, அந்த இடத்திலிருந்து ரத்தம் வழிந்திருக்கிறது. இன்றும் அந்த வடு அம்மன் சிலையின் பின்புறம் உள்ளதாம்.

இக்கோவிலின் பிரசாதத் தீர்த்தம் இளநீரும் பன்னீரும் சேர்த்துத் தயாரானது. அதைக் கண்ணில் சொட்டு சொட்டாக விட்டுக் கொண்டால், கண் பார்வை தெளிவாகிறதாம். வெள்ளி, செவ்வாய், அமாவாசை போன்ற தினங்களில் கூட்டம் அலைமோதுகிறது. கேரளத்துப் பக்தர்கள் ஏராளம்.

மாரியம்மனோடு பிள்ளையார் சன்னிதியும் இப்போது கட்டப்பட்டு வருகிறது. மேலும் கோவிலின் விமானத்தைப் புனருத்தாரணம் செய்யும் எண்ணமுள்ளது. கோவிலைச் சுற்றி நந்தவனம் அமைக்கவும் நவக்கிரகம் பிரதிஷ்டை செய்யவும் திட்டமிட்டிருக்கிறார்கள்.

# அம்மன்கள்!

கமலமனராஜன்

இக்கோவிலின் இன்னொரு விசேஷம் - பெயர், நட்சத்திரம், கோத்திரம் கேட்டு அர்ச்சனை செய்வது போல், ஆட்டோ, லாரி, பஸ் எண்களைச் சொல்லியும் அர்ச்சனை நடத்தப்படுகிறது!

**ம**க்களைக் கவர்ந்திருக்கும் மற்றொரு அம்மன் மாசாணியம்மன். ரங்கநாதரைப் போல் சயனித்திருக்கும் உருவம். ஆனால் மல்லாந்தபடி சயனம். பெரும் ஆகிருதி. ராமர் இந்த அம்மனைப் பூஜித்தாராம்.

கோவிலுக்குப் போவதற்கு முன், பக்கத்து நதியில் கால் கழுவி, நீரைத் தலையில் தெளித்தே நுழைகிறார்கள். இந்தக் கோவிலில் ஒரு கல் இருக்கிறது. அதன் பக்கத்தில் சிவப்பு மிளகாய்கள் கொட்டி வைக்கப் பட்டுள்ளன. மிளகாயை அரைத்து, கல்லில் பூசி விட்டுப் பிரார்த்தனை செய்கிறார்கள். இதனால் திருட்டுப் போன பொருள் திரும்பக் கிடைக்கும் என்று ஒரு நம்பிக்கை.

**பொ**ள்ளாச்சியின் மத்தியிலேயே பிறிதொரு மாரியம்மன் கோவில் இருக்கிறது. புத்தர், காந்தி, பரமஹம்சர் உருவங்களை இக்கோவில் கோபுரத்தில் காணலாம். இக்கோவிலில் தேர்த் திருவிழா விசேஷமானது. மூன்று நாட்கள் நடக்கிறது. அந்த விழாவிற்கு வரும் பெரும்பாலான பக்தர்கள் யார் தெரியுமா? முஸ்லிம்கள்! ஒற்றுமைக்கான பெரும் சின்னம் இக்கோவில்.



* புத்தர், பரமஹம்ஸர், காந்திக்கு கோபுரத்தில் சிலை!



* மாசாணியம்மன் கோவில்

வாசகர் தகவல் :

**ரோகிணி ஸ்ரீராம், பாலகிருஷ்ணன், பிருதிவிராஜ், கலைச்செல்வன்**

# Kalki Shopping Page

தங்க நகையில்
மங்கையர் எண்ணம்
எங்கள் கைவண்ணம்



22ct தங்கம், வைர,
வெள்ளி நகைகளுக்கு




**சாந்தி கோல்டு ஹவுஸ்**

எங்கள் நகை சேமிப்புத் திட்டத்தில்
சேர்ந்து பயன்பெறுங்கள்.
சேரும் அங்கத்தினர்களுக்கு
மாதாந்திர தவணைத் தொகைக்கு
ஏற்ற பரிசுப் பொருள்
அளிக்கப்படும்.

72, உஸ்மான் ரோடு,
தி. நகர்,
சென்னை - 600 017.
Phone : 441730.

---

STEP IN FOR
Raymond's
DIGJAM
SUITINGS & SHIRTINGS

**NEWLOOK** TAILORS

WE
ACCEPT
CREDIT
CARDS

Opp : T. Nagar Bus Terminus
PHONE : 44 34 48
NO BRANCHES
We specialise in Bridegroom's dress
to make the bride proud.

---

# B. M. SILK SAREES

Manufacturers Of :

## KANCHIPURAM SILK SAREES

5, North Mada Street,
Mylapore, Madras - 600 004

ALL SAREES ARE SOLD AT LOOM PRICES



# Kalki Shopping Page



சலங்கை –
மாத இதழ்
படித்தீர்களா?
வாசிக்க
நேசிக்க
யோசிக்க...

**சலங்கை**

புதிய பொலிவோடு வெளிவருகிறது
சலங்கை மாத இதழ்

ஆசிரியர் :
**இரத்தின கணேசன்**

வியாபார விசாரணைகளுக்குத்
தொடர்பு கொள்க.

No. 5, BISHOP GARDEN EXTENSION,
SRINIVASA AVENUE,
MADRAS - 600 028.

---

டெம்பிள் ஜுவல்லரி
வெள்ளி நவீன நகைகள்
நவ நாகரிக நாட்டிய
நகைகள்
] பிரத்தியேக அங்காடி



வெள்ளி நகைகள்
ஆர்டர்களும்
ஏற்கப்படும்.

தயாரிப்பு &
விற்பனையாளர்கள் :

**சுக்ரா ஜுவல்லரி**

40, வடக்கு மாட வீதி,
மயிலாப்பூர்,
சென்னை – 600 004.
Ph : 77499

---

• PEARLS • AMERICAN DIAMONDS • BIRTH STONES • SEMI PRECIOUS

• CORALS BIG SIZE

MOHAN MALA GOLD BEADS

JEWELLERY

• CORAL FLOWERS

*We Don't Announce These Offers*

- ▷ Buy One Take One Free
- ▷ 50% Discount On Pearls
- ▷ No Making Charges
- ▷ 10% Less Till ...............
- ▷ Pearls at Rs. 600/- Per gm. Rs. 300/- Per gm. only

*We Only Offer*

- Quality Hyderabad Pearls and Gems at Hyderabad Prices itself.

*We Announce*

- Novel Gift ideas this Pongal to suit your budget, taste & class.
- **Whoever bring this advertisement cutting will be given 10% Discount.**



VISIT US
ONCE TO
SEE THE DIFFERENCE



**NARAYANA pearls**

Shop No. 4, Basement, Kasi Arcade, 116, Thyagaraya Road, T. Nagar, Madras - 17.

COME AND REPAIR YOUR PEARL SETS (PURCHASED ANYWHERE) WITH OUR SPECIALIST. FREE OF COST.



* விளையாடும் பையன்கள்

# சுற்றுலா சொர்க்கம்!

நம் ஊர் சினிமாக்காரர்கள் ஆன்னா ஊன்னா பொள்ளாச்சியில் டேரா போடுவதற்குக் காரணம் இருக்கிறது. நூறு சதம் நகரமும் இல்லாமல், நூறு சதம் கிராமமும் இல்லாமல், ரெண்டுங் கெட்டான் என்றும் சொல்ல முடியாத - பிரும்ம தத்துவம் மாதிரி புரிந்து கொள்ள முடியாத சிக்கலான நகரமைப்பு. ஸாரி, கிராம அமைப்பு. ஸாரி - அம்பேல்!

நகரின் மையப்பகுதியெல்லாம் சென்னை கொத்தவால் சாவடிக்கு எள்ளளவும் குறைவற்ற கச்சடாதான். அட்டைப் பட எழில் பிரதேசங்களுக்கெல்லாம் கொஞ்சம் தள்ளிப் போக வேண்டும். சுமார் 20-25 கிலோ மீட்டர்கள். நகர வாடை முற்றிலும் மறைந்து அப்போது செம்மண் வாடை வீச ஆரம்பிக்கும். மஞ்சள், கடலை, நெல், கரும்புப் பயிர்களை வழி நெடுகக் காணலாம். குடை பிடிக்கும் மரங்களுக்குக் குறைவில்லை. மெட்ராஸ்காரர்கள் மெய்சிலிர்க்கும் அளவுக்குத் தண்ணீர், தண்ணீர், தண்ணீர்! ஆங்காங்கே டீக்கடை. கோவில் இருந்தால் பூ. தேங்காய், ஸ்பீக்கர். மற்றபடி சங்க இலக்கியங்கள் அவ்வப்போது பகரும் புள்ளினங்களின் கிக்கீ, குக்கூ.

இயற்கை எழில் தவிர, பொள்ளாச்சியை சினிமாக்காரர்கள் தேர்ந்தெடுப்பதற்கான இதர காரணங்களாக நமக்குத் தோன்றியவை இவை :

1. மக்கள் இன்னும் முழுப் பட்டணவாசிகள் ஆகாததால் கொஞ்சம் தாராளமாகவே மனிதாபிமானம், விருந்தினர் உபசரிப்பு, அவசரகால உதவிகள், கலை ஆர்வம், தொந்தரவு தராத சுபாவம் இவற்றையெல்லாம் போற்றிப் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள்.

2. அடிக்கடி ஷூட்டிங் பார்த்துப் பழகி விட்டதால் அடிப்படை தொழில் நுட்ப அறிவு, பாமரருக்கும் வந்திருக்கிறது. (''ஒரு ஷாட் வைத்தால், இத்தனை நூரம்

'field' என்று உணர்ந்து அதுவரை தாமே ஒதுங்கி நிற்கிறார்கள். பண்பட்ட சினிமாக் காரர்களுக்கே இது குழப்பம் தரும் விஷயம்'' என்கிறார் பொள்ளாச்சியில் நாம் சந்தித்த இயக்குநர் புகழேந்தி.)

3. திடீர் திடீரென்று பங்களாக்கள், அரண்மனைகள் வேண்டுமென்றால், ஆர்ட் டைரக்டர்கள் மண்டையைப் பிய்த்துக் கொண்டு செட் போட வேண்டாம். புரவிபாளையம், ஊத்துக் குழி, வேட்டைக் காரன் புதூர் இங்கெல்லாம் ஜமீன் பங்களாக்கள் ரெடிமேடாக இருக்கின்றன.

4. சென்னை போன்ற பெரு நகரங்களோடு ஒப்பிடுகையில் செலவு மிக, மிக, மிகக் குறைவு (சினிமாக்காரர்களுக்கு மட்டும்.)

ஷூட்டிங்குக்கு இடம் கொடுப்பவரின் சித்தப்பாவையோ, பாட்டியையோ ஒரு ஸீனில் தலைகாட்ட வைத்து விட்டால் ஆயுள் சந்தா விசுவாசம் காட்டுகிறார்கள். எனவே ஏராளத் திரையர்களை இங்கே பார்க்க முடிகிறது.

சொன்னால் நம்பமாட்டீர்கள். நாம் சென்றிருந்த போது, ஆழியாறு பக்கம் ரோட்டோரத்தில் நடந்த வாக்கில் படு கேஷுவலாக சத்யராஜ் டீ குடித்துக் கொண்டிருக்கிறார்! டைரக்டர் மனோஜ் குமார் மரத்தடியில் உட்கார்ந்து குட்டி குட்டி கற்களை கோலி மாதிரி விளையாடிக் கொண்டிருக்கிறார். செல்வா, தனது நண்பர்களுடன் ஊரே அதிரும்படிப் பேசிச் சிரித்துக் கொண்டிருக்கிறார்.

மக்களுக்கு, சினிமாவைப் போலவே, சினிமாக்காரர்களும் பழகி விட்டார்கள். அதிகாலை வேளையில் சாலையோர டீக்கடைகளில், ஓமக்குச்சி நரசிம்மன், இடிச்சபுளி செல்வராஜ் போன்றோரை வெகு சாதாரணமாகப் பார்க்கலாம் என்கிறார் நமது வாசகர் பொன்ராஜ்குமார்.

டூரிஸ்ட் சென்டர்கள் என்று பொதுவாகச் சொன்னாலும் டாப் ஸ்லிப், மங்கி ஃபால்ஸ், ஆழியாறு அணை, வால்பாறை போன்ற இடங்களிலும் சினிமாக்காரர்கள் ஆக்கிரமிப்புதான் அதிகம். பெரும்பாலான பொது மக்கள் பொள்ளாச்சியை ஏனோ சுற்றுலாத்தலமாகக் கருதி, அதிகம் வருவதில்லை என்ற உண்மையைச் சொல்பவர் உலகநாதன். உள்ளூரில் ஒரு டெய்லர். ஆனால், ஒருமுறை இந்தப் பக்கம் வந்து பார்த்தவர்களுக்கு, திரும்பிப் போக மனம் வராதென்பது உண்மை. ஆங்காங்கே லாட்ஜுகள், ரெஸ்ட் ஹவுஸ்கள், தடுக்கி விழுந்தால் ஹோட்டல்கள், நியாய வாடகை(!)யில் ஆட்டோ, டாக்ஸி இப்படியாக. தவிரவும்


* செல்வா


* புகழேந்தி

* மைந்தன் படப்பிடிப்பில்.....



* நடைபோடும் யானைகள்



* பொன்ராஜ்குமார்



* உலகநாதன்

மூலைக்கு ஒரு கோவில், ஆன்மிக அற்புதங்கள், சித்தர்கள் என்று வேறு சில மார்க்கங்கள் (விவரங்கள் வேறு கட்டுரைகளில்).

நமது கணிப்பில் ஊட்டிக்கோ, கொடைக்கானலுக்கோ, ஏற்காட்டுக்கோ எள்ளளவும் சளைத்ததல்ல பொள்ளாச்சி.

உதாரணமாக டாப் ஸ்லிப். தரை மட்டத்திலிருந்து 750 அடி உயரமுள்ள இந்த மலைப் பிரதேசத்தின் தனிச்சிறப்பு, இங்கு நிலவும் தட்பவெப்பம். 'குளிர்' என்று சொல்லி முடிப்பதற்குள் வெயிலடிக்கிறது. அண்ணாந்து பார்ப்பதற்குள் அர்த்த ஜாமம் மாதிரி இருட்டி விடுகிறது. புல் வெளியும் (''இருடா இருடா''ல புத்தம் புது பூமி இங்கதான் எடுத்தாங்க. இந்த மேட்டைத்தான் மலை மாதிரி காட்டிட்டாங்க!'' - நமது கைடு.) அடர்ந்த வனங்களும் யானை, குரங்கு, மான் (ஏராளம்), பாம்பு, காட்டெருமை, காட்டுப்பன்றி இன்ன பிற ஜீவராசிகளும், கொஞ்சம் கொஞ்சம் மனிதர்களுமாக ஜொலிக்கும் பிரதேசம். நடந்து கொண்டே இருந்தால் சட்டென்று காட்டாறு குறுக்கிடுகிறது. தண்ணீரில் யாரோ தேன் பாட்டிலைக் கவிழ்த்து விட்டது போல் அப்படி ஒரு ஸ்வீட் ஜில்! யானைகளின் சரணாலயம். ஸலாமிடும் யானைகள். டான்ஸ் ஆடும் யானைகள். கொஞ்சும் யானைக் குட்டிகள். சுற்றுலாப் பயணிகளும் கொஞ்சலாம் - முட்டாது, மிரளாது, பிளிறாது. (அட்டையில் கொஞ்சுவது ஒரு சிம்லா கோஷ்டி.)

**யா**னைகளைக் கொண்டு ஒரு காலத்தில் மலை மீதிருந்து மரங்களைத் தள்ளி

## குட்டியானைக்குக் கொம்பு முளைச்சுதாம்....



* வெள்ளத்தில் அடித்து வரப்பட்ட யானைக்குட்டி லாரன்ஸ்.

படத்தில் நீங்கள் பார்க்கும் யானைக் குட்டியின் பெயர் லாரன்ஸ். சமீபத்திய வெள்ளத்தில் சிக்கி, அடித்து வரப்பட்டு வனத்துறையினர் கையில் அகப்பட்டு இப்போது டாப்-ஸ்லிப்பில் வசித்து வருகிறது. வயது, சரியாக மூன்று மாதங்கள். வெள்ளம், புயல் போன்ற இயற்கை சீற்றங்களில், இது போல் குட்டியானைகள் காணாமல் போவது அடிக்கடி நிகழும் விஷயம் என்கிறார் லாரன்ஸைப் பராமரிக்கும் மலைவாசி. ''தாயைப் பிரிந்து இப்படி சிக்கிக் கொள்ளும் யானைகள் சுலபத்தில் சொன்ன பேச்சைக் கேட்பதில்லை. அவை வளர வளர, முரட்டுத்தனமும் சேர்ந்தே வளருகிறது. பராமரிப்பது மிகவும் சிரமம்'' என்கிறார் நமது டாப்-ஸ்லிப் கைடு வினாயகம்.



# பார்க் டவுன்
# பெனிஃபிட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1985
223, தெற்கு தங்கசாலை வீதி (முதல் மாடி), சென்னை - 600 003. போன்:582676; 564354

## கனகதாரா முதலீட்டுத் திட்டம்

**உங்கள் குழந்தைச் செல்வங்களை கோடீஸ்வரனாக்குங்கள்!**

**ரூ. 50,000/-** செலுத்துவீர். 10 ஆண்டுகளில் **ரூ. 50,000/-ஐ** திரும்பப் பெறுவீர்.

மீண்டும் 20ம் ஆண்டு நிறைவில் ரூபாய் **ஒரு கோடியை** பெறுவீர்.
(ரூ. 12,500/-ம் அதன் பெருக்கமும் பெற்றுக் கொள்ளப்படும்)

## வெகுமதி முதலீட்டுத் திட்டம்

**ரூ. 580/-** செலுத்துவீர். 252 மாதங்கள் நிறைவில் **ரூ. 40,000/-** பெறுவீர்.

## பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | •5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

மாத வட்டிக்கான செக்குகள் முன்கூட்டியே கொடுக்கப்படும். உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது 90 மாதங்களில் 4 மடங்காகிறது.

## காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம் 15 ஆண்டுகள்

| வைப்புத் தொகை | முதல் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | இரண்டாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | மூன்றாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| ரூ. 6,320/- | ரூ. 6,000/- | ரூ. 6,000/- | ரூ. 56,320/- |
| ரூ. 25,280/- | ரூ. 24,000/- | ரூ. 24,000/- | ரூ. 2,25,280/- |

## பென்ஷனர் நலத் திட்டம் - வட்டி 19 1/2%

வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

## செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

**உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா!** இதோ
ரூ. 7500/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் **ரூ. 1,25,000/-** பெறலாம்
ரூ. 9000/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் **ரூ. 1,50,000/-** பெறலாம்
சேவிங்ஸ் கணக்குகள் மீது 10% வட்டி

SURESH

| | | |
|---|---|---|
| **கடன்** | நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும் சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும். | வட்டி விகிதம் ரூ. 1.85 |

கௌரவ ஆலோசகர்:
**P. பாலசுப்ரமணியம்,** B.Sc.
முதன்மை அறங்காவலர்
கந்தகோட்டம், சென்னை - 3.

(Friday Weekly Holiday)

இயக்குனர் குழுத் தலைவர்:
**R. விவேகானந்தன்,** B.Com.

பங்குதாரர்களுக்கு மட்டும் Business Hours :
Week days 8.30 a.m. to 12.30 p.m. &
2.00 p.m. to 6.00 p.m.
Sunday 8:30 a.m. to 12 noon.

**சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி**

விடச் செய்தார்களாம். Top லிருந்து Slip செய்யப்பட்டதால் TopSlip என்று வியாக்கியானம் வரைகிறார் ஒரு ஃபாரஸ்ட் ஆபீஸர். மலை முழுக்க ஏராள தேக்கு மரங்கள். ஆனால் யாரும் திருடிப் போக முடியாது. ஏனெனில் ஒன்வே! மாட்டிக் கொண்டே ஆகவேண்டும். மலைக்கு மறுபுறம் கேரளா.

டாப் ஸ்லிப்பிலிருந்து மேலே போனால் அட்டகட்டி (ரயில் ஸ்நேகம்), வால்பாறை, பரம்பிக்குளம் etc. கீழே வந்தால் ஆழியாறு - மங்கி ஃபால்ஸ்.

ஒரு காலத்தில் மங்கிக்கள் இருந்திருக்கலாம். இப்போது காணோம். மிகச் சின்ன அருவிதான். தற்கொலை ஸீன்களிலும், டூயட் ஸீன்களிலும் அநேக அநேக சினிமாக்களில் பார்த்திருப்பீர்கள்.

காட்டருவி. சுமார் 100 அடி உயரம் தான் இருக்கும். வீழ்ந்ததும் நேரே ஆழியாறு அணைக்கட்டுக்குள் போய்ச் சேர்ந்து விடுகிறது. ஆபத்தில்லாத அருவி. சினிமாக்காரர்களுக்கே உருவான அருவி.

கொஞ்சம் தள்ளி, சில குகைகள். சமண முனிவர்கள் தவமிருந்ததாகச் சொல்கிறார் கள். இப்போது வில்லன்கள் மறைந்து கொண்டு டுமீல் டுமீல் என்கிறார்கள். (சினிமாவில்தான்.)

இத்தனை அழகான பிரதேசங்களை வைத்துக் கொண்டு டூரிஸ்டுகள் ஏன் அதிகம் வருவதில்லை என்று இவர்கள் மண்டையைப் பிய்த்துக் கொள்வதில் அர்த்தம் இருக்கிறது.

நமக்குத் தோன்றின காரணம்: நுழைவுக் கட்டணம் என்கிற பெயரில் ஆங்காங்கே நடக்கும் சில வசூல்கள். ஊட்டி, குன்னூர், ஒகேனேகல், குற்றாலத்தி லெல்லாம் கட்டணம் ஏதும் வசூலிக் கிறார்களா என்ன?

பராமரிப்பு அவசியம்தான். ஆளுக்கேற்றாற் போல 'ரேட்' வாங்குவதுதான் இடிக்கிறது.

''சார் பத்திரிகையா? முதல்லயே சொல்லியிருக்கக்கூடாது? இவ்ளோ போட்டிருக்க மாட்டேன்ல?'' - இது ஒரு வசூலரின் வருத்தம்.

- பா. ராகவன்.

மேலட்டை வண்ணப்படம், மற்றும் பொள்ளாச்சி தொடர்பான ஏனைய படங்கள் : கோபிநாத்.

வாசகர் தகவல் : கலைச்செல்வன், சுபத்ரா, கி. ரவீந்திரன், உலகநாதன்.




துணை வேந்தர் தேர்வுக் குழுவாம்...
ச்சீ! ஒன்றையும் சரியில்லை...
சென்னா ரெட்டி




கேட்டீங்களா, புத்தம்புது தேர்வுக் குழு ... இதோ!


சும்மா சொல்லாதீங்க... நீங்கதான் முதல்வர்! பிரதமரே அனுப்பின கிரீடத்தை சூட்டறேன்... எல்லாம் சரியாப் போயிடும்...
12 அம்ச செயல் திட்டம்
அதிருப்தியாளர்கள்
மிஸ்ரா
மொய்லி


ஏசுவழி ஐயையா... என்ன வழி ஐயையா... ராவுக்கிட்டே ஐயையா... சொல்லிப்புட்டோம் ஐயையா... காதும் போச்சா ஐயையா... காத்திருந்தோம் ஐயையா...
வாழப்பாடி தலைமையில் எட்டு கட்சிகள்




கல்கி





1994
ஜனவரி 30
மலர் : 52
இதழ் : 27
ஸ்ரீமுக
தை 17


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

# ஜெயலலிதா பதவி இழப்பாரா?

தத்தமது கட்சிக்குள் தோழமை உணர்வு என்பது எட்டிக் கூடப் பார்க்காத நிலையில், தமிழகத்தின் எட்டு ''தோழமைக் கட்சிகள்'' ஒன்று சேர்ந்து, 'ஜெ' அரசைப் பதவி இறக்கம் செய்யுமாறு பிரதமரிடம் கோரிக்கை விடுக்கிறார்கள், வாழப்பாடியார் தலைமையில்! இவர்களின் தோழமை உணர்வெல்லாம் அ.தி.மு.க. அரசை டிஸ்மிஸ் செய்வது ஒன்றில் மட்டும்தான்!

''ஜனநாயக மரபுகளை 'ஜெ' குழிதோண்டிப் புதைக்கிறார்'' என்று புலம்பும் இந்தக் கட்சிகள், 'மக்களால் அபரிமித மெஜாரிட்டியுடன் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் ஆட்சியை, வலுவான காரணம் இன்றி டிஸ்மிஸ் செய்வது ஜனநாயக மரபு ஆகுமா?' என்று சிந்தித்துப் பார்ப்பதாகத் தெரியவில்லை.

ஜெ. தலைமையில் அ.தி.மு.க. ஆட்சியில் பல தவறுகள் நடந்திருக்கின்றன; இனியும் நடக்கப் போகின்றன என்பதில் நமக்குச் சந்தேகமில்லை. ஆனால் ஆட்சியையே டிஸ்மிஸ் செய்யுமளவுக்கு இங்கே நிலைமை படுமோசமாகி விட்டதாகக் கூற இயலாது.

'டான்ஸி ஊழல்' என்றும் 'நிலக்கரி ஊழல்' என்றும் 'சசிகலா சொத்து சேர்த்து விட்டார்' என்றும் பேசப்படுகிறதே தவிர, எதையும் நிரூபிக்க உறுதியான சாட்சியங்கள் இருப்பதாகத் தெரியவில்லை. அப்படி இருக்குமானால் தி.மு.க. கோரியது போல் முதல்வர் மீது வழக்குப் போட ஆளுனர் அனுமதிக்கலாமே?

மக்கள் சகஜ வாழ்வு நடத்த முடியாதபடி இங்கே சட்டம் - ஒழுங்கு சீர்குலைந்து விட்டதா என்றால், பெரும்பாலான சட்ட ஒழுங்கு பிரச்னைகள் இங்கு அரசியல்வாதிகளால் உருவாக்கப்படுவதே! 'விடுதலைப் புலிகள்' என்று கூறி பயமுறுத்துகிறார்கள். இந்த விஷயத்தில் மாநில அரசுக்கு உள்ளது போல் மத்திய அரசுக்கும் பொறுப்பு உண்டு. விஷயம் போலீஸ் துறையைச் சேர்ந்தது மட்டுமல்ல. அயல்நாட்டு விவகாரம். கடற்படையும் சம்பந்தப்பட்டது. உண்மை என்னவெனில், பல மைல் நீளமுள்ள கடற்கரையோரப் பகுதிகளைக் கண்காணிப்பது கடற்படைக்கே கூடக் கடினமான பணிதான். அதற்கு நாம் அனுதாபப்படலாம். ஆனால் எதிர்க்கட்சியினர் இதை மறந்து, 'ஜெ' மீதே முழுசாகக் குற்றம் சுமத்தப் பார்ப்பது மக்களை ஏமாற்றுவதாகும்.

இங்கு மரபுகள் மீறப்படுகின்றன என்பதும் உண்மையே. இதை நாம் விரும்பவும் இல்லை. ஆனால் இதற்கெல்லாம் ஆட்சியை டிஸ்மிஸ் செய்வது என்று ஆரம்பித்தால் இந்தியாவில் எந்த மாநிலத்திலும் ஆட்சியே நடக்காது. மத்தியிலும் ஓர் அரசு இருக்க முடியாது! யார்தான் மரபுகளை மீறவில்லை? காங்கிரஸ் அரசு மீறினால் சீர்திருத்தம்; அ.தி.மு.க. அரசு மீறினால் குற்றம் என்றால் அந்த வாதம் மக்களிடம் செல்லாக் காசாகி விடும்.

சொல்லப் போனால் 'ஜெ' அரசை டிஸ்மிஸ் செய்யும் தார்மிக பலத்தை இன்று மத்திய அரசு இழந்து நிற்கிறது. ராணுவத்தைக் குவித்தும் அயோத்தியில் பாபர் மசூதியைக் காப்பாற்ற முடியாத அரசு, பங்கு மார்க்கெட் ஊழலில் பயங்கரமாகச் சிக்கியுள்ள அரசு, மரபுகளை மீறி அஜித்சிங்கை அணைத்துக் கொண்டு போகும் அரசு, எப்படி 'ஜெ' மீது பாய முடியும்?

எனவே 'ஜெ' அரசை தேர்தல் வரை ஆள விட்டு, தவறுகளை சட்டமன்றத்திலும் வெளியேயும் எடுத்துரைத்து, அமைதியான முறையில் மக்கள் கருத்தை அ.தி.மு.க. ஆட்சிக்கு எதிராக உருவாக்குவதே காங்கிரஸ் கடைப்பிடிக்க வேண்டிய நேர்மையான ராஜதந்திரம். இதை விடுத்து, நமக்குத்தான் நாடாளுமன்றத்தில் மெஜாரிட்டி கிடைத்து விட்டதே என்ற தைரியத்தில், இனி 'ஜெ' தயவு அங்கு தேவையில்லை என்ற துணிவில், ஆளுனருக்கும் முதல்வருக்கும் இடையே நடக்கும் பனிப் போரைச் சாதகமாக்கிக் கொண்டு, பதவி நீக்க நாடகத்தில் ஈடுபட்டால், மக்களுக்கு இந்த ஆட்சி மீது உள்ள கொஞ்ச நஞ்ச அதிருப்தியும் நீங்கி, அனுதாபமே பெருகும். காங்கிரஸ் தன் தலையில் தானே மண்ணை அள்ளிப் போட்டுக் கொண்டதாகும்.

மத்திய அமைச்சரவையைத் திருத்தி அமைக்கவே திணறித் திண்டாடிக் கொண்டிருக்கும் பிரதமரிடம், மாறி மாறி மாநிலப் பிரச்னைகளையும் கொண்டு சென்று பிடுங்கலை அதிகரிப்பது, காங்கிரஸ்காரர்கள் தங்கள் தலைவருக்குச் செய்கிற உபகாரமாகாது. கட்சிக்குள்ளும் சரி, எதிர்க்கட்சி என்ற முறையிலும் சரி, காங்கிரஸ்காரர்கள் ஆக்கபூர்வமான எதிர்ப்பைக் காட்டத் தெரிந்து கொள்ள வேண்டும்.



* கழிப்பிடத்தின் இடையே படிப்பு!

# சாதனைப் பட்டியலில் சேர்த்துக் கொள்ளுங்கள்!

●● பொள்ளாச்சியின் கோட்டூர் ரோடு வழியாகச் செல்பவர்களுக்கு, பள்ளமாக ஒரு பெரும் பரப்பு தெரியவரும். குளமோ, ஏரியோ என்று ஆர்வத்தோடு நெருங்கினால், மூக்கைத் துளைக்கும் நாற்றம். ஆனால், இந்த நாற்றத்தின் நடுவேதான் இரண்டு பள்ளிகள் உள்ளன! ஒன்று கோட்டூர் ரோடு ஸ்கூல். மற்றொன்று தெப்பக்குளம் ஸ்கூல்.

எதிரும் புதிருமாய் இருக்கும் இப்பள்ளிகளின் வளாகங்கள் சுற்றி வாழ்பவர்களுக்குக் கழிப்பிடம்! இரண்டு பள்ளிகளுக்கும் சுற்றுச்சுவர் இல்லை. அதனால் கேட்பாரும் இல்லை.

ஒரு மராமத்து வேலையில்லை, கண்ணாம்பு இல்லை. மழைக் காலத்தில் சுவர்கள் வாய்பிளக்க, தண்ணீர் வழியல். ஆசிரியர் கூட்டணியினர், பள்ளியை ஒட்டிய கோட்டூர் ரோடில், போக்குவரத்தைத் தடுத்து தர்ணா செய்திருக்கிறார்கள். ஓடி வந்த அதிகாரிகள், 'எல்லாவற்றையும் சரி செய்கிறோம்' என்ற வாக்குறுதியோடு காணாமல் போய்விட்டனர்!

இரவில்தான் இந்த இடம் கழிப்பிடம் என்றில்லை. பள்ளி நடக்கும் போதே சர்வ சாதாரணமாய் இயற்கையின் அழைப்புக்குச் செவி சாய்க்கிறார்களாம் - கேட்டால் அடிக்க வருகிறார்களாம்!

வகுப்புக்கள், கதவுகள் மூடப்பட்டே நடக்கின்றன. இரவில் அந்தப் பக்கம் யாருமே நடக்க முடியாது என்கிறார்கள். சமூக விரோதச் செயல்களுக்கான புகலிடமாக இருப்பதாகவும் கூறுகிறார்கள்.

அந்தப் பள்ளியின் ஓர் ஆசிரியை கூறியது போல், 'இதற்குமேல் எந்த நரகமும் இருந்துவிடப் போவதில்லை'.

●● நவீன அரிசி ஆலை என்று பொள்ளாச்சி பெருமைப்படலாம். ஆனால் பி.கே. எஸ் காலனிக்காரர்களால் அது முடியாது.

எ. சுப்ரமணியன், வீட்டின் ஓட்டை லேசாகத் தட்டிக் காட்டினார். பொலபொல வென்று சாம்பல் உதிர்கிறது. தூர நின்று பார்த்தால் வீடுகளின் ஓடுகள் மேல், முழுவதும் சாம்பல்! மேலே மேலே படிந்து அதுவே ஒரு போர்வையாகி விட்டிருக்கிறது!

நவீன அரிசி ஆலையே இதன் சூத்திரதாரி. அது எரித்து வெளியிடும் சாம்பல் காற்றடிக்கும் திசையெல்லாம் பரவி, தன் 'புகழ்' பரப்புகிறது. பி.கே.எஸ். காலனிக்கு ஒரு ஆறுமாதம் அதன் அருள் பாலிப்பு உண்டு.

திறந்து வைத்த உணவு, நீர், இன்னபிற பொருள்களெல்லாம் சாம்பல் படிவது சகஜமாம். வயதான சின்னம்மாள் கூறும் போது, 'கண்ணில் கூட சாம்பல் ஒட்டிக் கொள்ளும்' என்று குறை பட்டுக் கொண்டார்.

'யாரைப் போய்க் கேட்பது?' என்கிறார்கள் அந்தக் காலனி இளைஞர்கள். ஆலை, அரசினுடையது. யாரும் பதிலும் சொல்ல மாட்டார்களாம். அதன் விளைவு, அந்தக் காலனி முழுவதும் சாம்பலைச் சகித்துக் கொண்டு வாழப் பழகியிருக்கிறது. அரசும் அரசியல் கட்சிகளும் தங்கள் சாதனைப் பட்டியல்களில் இவற்றையும் சேர்த்துக் கொள்ளலாம்!

- ஞானம்



* சின்னம்மாள்



* சுப்பிரமணியன்



ஐசிஎஸ் R. நடராஜன்
நிர்வாக இயக்குநர்

# ஐசிஎஸ் குரூப்

வர்த்தக அலுவலகம்: 221, சத்தியமூர்த்தி சாலை, இராம் நகர்,
கோயமுத்தூர் - 641 009. போன்: 230463.




50 ஆண்டுகளுக்கு
மேலான
அரிய சேவை

## டெபாசிட் திட்டங்கள்

குறுகிய கால டெபாசிட் — பிக்சட் டெபாசிட்

| காலம் | 1 நாள் முதல் 90 நாட்கள் முடிய | 91 நாட்கள் முதல் 180 முடிய | 181 நாட்கள் முதல் 365 முடிய | 12 மாதங்களுக்கு | 25 மாதங்களுக்கு | 36 மாதங்களுக்கு | 48 மாதங்களுக்கு | 60 மாதங்களுக்கு |
|---|---|---|---|---|---|---|---|---|
| வட்டி விகிதம் ஆண்டுக்கு | 15% | 16% | 17% | 18% | 18.5% | 19% | 19.5% | 20% |
| | | | | 17% | 17.5% | 18% | 18.5% | 19% |
| | | | | 16% | 16.5% | 17% | 17.5% | 18% |

## கபிட்சம் வைப்புத் திட்டம்

**ரூ. 10,000/- செலுத்தினால் 45 மாதங்களில் ரூ. 21,000/- கிடைக்கிறது.**

ரூ. 10,000/-ம் அதன் மடங்கில் பணம் செலுத்துவோர் மட்டுமே பங்கு பெற முடியும்

## ரெக்கரிங் டெபாசிட் திட்டம்

| மாத தவணைத் தொகை ரூ. | காலக்கெடுவில் பெறவுள்ள முதிர்வுத்தொகை | | | | |
|---|---|---|---|---|---|
| | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 48 மாதங்கள் | 60 மாதங்கள் |
| 100 | 1310 | 2850 | 4680 | 6870 | 9490 |
| 250 | 3275 | 7125 | 11700 | 17175 | 23725 |
| 500 | 6550 | 14250 | 23400 | 34350 | 47450 |

## குமுலேட்டிவ் டெபாசிட் திட்டம்

| டெபாசிட் தொகை ரூ. | முதிர்வு அடையும் போது பெறும் தொகை | | |
|---|---|---|---|
| | 45 மாதங்கள் | 68 மாதங்கள் | 90 மாதங்கள் |
| 1000 | 2000 | 3000 | 4000 |
| 5000 | 10000 | 15000 | 20000 |
| 7500 | 15000 | 22500 | 30000 |
| 10000 | 20000 | 30000 | 40000 |

- 45 மாதங்களில் இரு மடங்கு
- 68 மாதங்களில் மூன்று மடங்கு
- 90 மாதங்களில் நான்கு மடங்கு

நகைக்கடன் மற்றும் இரண்டு சக்கர வாகனங்களுக்கு கடனுதவியும் வழங்கப்படும்

செழுமை தரும் சேமிப்பு திட்டங்கள்! ஐஸ்வர்யத்தின் அட்சயபாத்திரம் - ஐசிஎஸ்!

12.4.1991 வெள்ளிக் கிழமை

இரவு 10:30 மணி

ஷிப்ட் முடிந்து மொபெட்டில் புறப்பட்டான் ராதாகிருஷ்ணன். அவன் வீட்டுக்குச் செல்ல பேருந்து நிலையத்தைத் தாண்டித்தான் செல்ல வேண்டும். இரண்டு சக்கர வாகனம் பேருந்து நிலையத்தைத் தாண்டும் போது இருளான பிளாட்பாரத்திலிருந்து ஓர் உருவம் வெளிப்பட்டது. கையில் கனத்த சூட்கேஸ் வைத்திருந்தது.

''சார்!'' என்ற விளிப்பில் மொபெட்டை நிறுத்தி, காலூன்றினான் ராதா. கூப்பிட்டவன் ஓடி வந்தான்.

''சார்! ஒரு உதவி!'' இறைஞ்சினான்.

''என்ன... சொல்லுங்க...'' கனிவாய்க் கேட்டான் ராதா.

''நான் சென்னை செல்ல வேண்டும். இடம் இல்லாமல் மூன்று பஸ்கள் போய் விட்டன. இனி அடுத்த பஸ் விடிகாலை 4:30 மணிக்குத்தானாம். பஸ் ஸ்டாண்டில் தங்கிப் பழக்கமில்லை. லாட்ஜ்களில் திருட்டுப் பயம். இன்றிரவு மட்டும் உங்கள் வீட்டில் தங்க இடம் கொடுத்தால் நன்றியுள்ளவனாக இருப்பேன். காலையில் சென்னைக்குப் புறப்படுவேன்...''

''உங்க பேர்?''

''திலீபன்...''

''என் பெயர் ராதாகிருஷ்ணன். சுருக்கமாக ராதா. ஆமா... உங்க சொந்த ஊர் நாகர்கோவிலா? உங்க தமிழ் ஒரு மாதிரி



இர்மிதா ராஜ்

இருக்கு?''

திலீபன் தயக்கமாய்த் தலையாட்டினான். ''ஆமாம் சகோதரரே!''

''புறப்படுங்கள் என்னுடன். தாராளமாக நீங்கள் என் வீட்டில் தங்கலாம்...''

திலீபன் பின்னே உட்கார - ராதா மொபெட்டைக் கிளப்பினான்.

**ரா**தா வீடு தீப் பெட்டி சைஸில் இருந்தது. மொபெட்டை நிறுத்தி விட்டுப் போய் கதவைத் தட்டி குரல் கொடுத்தான். அகால வேளையிலும் கணவனுடைய குரலுக்காகக் காத்திருந்தது போல் உடன் பதில் குரல் கொடுத்தாள் அவனின் மனைவி. ஐந்து நொடி கரைசலில் கதவைத் திறந்து விட்டாள்.

ராதா திலீபனைச் சுட்டி, ''சார் நம்ம கெஸ்ட் குட்டிம்மா!'' என்றான். திலீபனிடம் திரும்பி, ''இது என் மனைவி அகல்யா.

படுக்கையில் ஒரு வயதான அம்மா தூங்கிக் கொண்டிருந்தார். ராதா திலீபனிடம் திரும்பி, ''எங்கம்மா!'' என்றான் பெருமையாக.

''குட்டிம்மா! என்ன சமையல் பண்ணிருக்க?''

''மிளகு ரசம்தான். புடலங்காய் கூட்டு மதியம் பண்ணினது. இப்ப அப்பளமும் முட்டையும் பொரிச்சிடுறேன். கூடுதலா வெங்காய சாம்பார் பண்ணிடுறேன்...''

திலீபன் சங்கோஜமாய், ''கஷ்டப்படாதீங்க சகோதரி. இருக்கிறதைக் குடுங்க.. சாப்பிட்டுக்கிறேன்.''

அகல்யா கேட்காமல் மண்ணெண்ணெய் ஸ்டவ்வுடன் போராடி சமையல் முடித்தாள். அதற்குள் தலையணைக்கு சலவை உறை மாற்றி பாயும், புது பெட்ஷீட்டும் திலீபனுக்காக விரித்து வைத்தான், ராதா.

சாப்பாடு பரிமாறினாள் அகல்யா.

''சகோதரர் அதிர்ஷ்டசாலி. அகால நேரத்தில் அழையா விருந்தாளியை கணவன் கூட்டி வந்ததும் முகஞ்சுளிக்காமல் விருந்தோம்பல் செய்யும் மனைவி கிடைப்பது அரிது. அதைவிட முக்கியமான விஷயம்... சமையலில் அன்பு தெரிகிறது. இதற்கு நானென்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?''

''இதென்ன சார் பெரிய விஷயம்? நீங்க ரெஸ்ட் எடுங்க...'' என்றாள் அகல்யா. மீதமிருந்த சொற்ப சாதத்தில் அடிதங்கிய ரசம் ஊற்றிச் சாப்பிட்டாள்.

மஞ்சள் நிற விடிவிளக்கு எரிய -

ராதா திலீபனுக்கு அருகிலும் அகல்யா இரு குழந்தைகளுக்கு அடுத்தும் படுத்துக் கொண்டாள். திலீபன் தான் கொண்டு வந்த சூட்கேஸைத் தலையணைக்கு பதில் தலைக்கு வைத்து படுத்திருந்தான். புது இடத்தில் சட்டென தூக்கம் வராமல் புரண்டான்.

அலாரம் நான்கு மணிக்கு விடாப்பிடியாய் ஒலித்தது. திலீபன் குளிக்க வெந்நீர் போட்டுக் கொடுத்தாள். குளியலுக்குப் பின் கடகட இட்லியும் தேங்காய்ச் சட்னியும் புதினா சட்னியும் பரிமாறினாள். ராதா திலீபனை மொபெட்டில் கூட்டிப் போய் சென்னை பஸ் ஏற்றி விட்டான்.

19.8.1992 புதன் கிழமை இரவு

8:45 மணி

**கா**வல்துறை தலைமையகத்திலிருந்து வந்த வயர்லெஸ் தகவல் கரகரத்தது.

''..............மூன்றாவது குறுக்குத் தெருவில் 18ஆம் நம்பர் பங்களாவில் ஐந்து விடுதலைப் புலிகள் தங்கியிருப்பதாகத் தகவல் வந்துள்ளது. அவர்களுக்கும் ராஜீவ் கொலைக்கும் நேரடித் தொடர்பிருக்கலாம். ரவுண்ட் அப் தி ஸ்பாட்! அரஸ்ட் தெம் ஆர் கில் தெம்! கமான் குயிக்! ஓவர்!''

அதிரடிப்படை அந்த பங்களாவைச் சூழ்ந்து கொண்டது. தொடர்ந்து நள்ளிரவு வரை துப்பாக்கிச் சண்டை!

ஒரு திடீர் நிமிஷத்தில் அதிரடிப்படை, பங்களாவின் மேற்கூரையை நகர்த்தி உள்ளே புகுந்தது. புலிகள் கடைசி உபாயமாக சயனைட் குப்பியைக் கடித்தனர். ஒரு அதிரடி வீரன் ஒரு புலியுடன் போராடி சயனைடைத் துப்ப வைத்து முறிவு இன்ஜெக்ஷன் போட்டான். அப்படியும் விஷம் மூளையைத் தாக்கி கோமா நிலைக்குப் பாய்ந்தான் அந்தப் புலி. அவன் வேறு யாருமல்ல - 12.4.91 இரவன்று ராதாகிருஷ்ணனின் வீட்டில் விருந்தாளியாய்த் தங்கின திலீபன்! கோமா நிலையில் திலீபன் இன்டென்ஸிவ் கேர் யூனிட்டுக்கு எடுத்துச் செல்லப்பட்டான். பங்களா ஆராயப்பட்டதில் எரியாமல் தப்பிய திலீபனின் டைரி சிக்கியது. டைரியில் காணப்பட்ட ஏராளமான முகவரிகளில் ராதாகிருஷ்ணனின் முகவரியும் ஒன்று.

21.10.1992 சனிக்கிழமை இரவு

9 மணி

**நூ**ற்றுக்கு மேற்பட்ட போலீஸ் ராதா வீட்டைச் சூழ்ந்தது. சர்ச் விளக்கு ராதா

வீட்டுச் சுற்றுப்புறத்தை பகலாக்கியது. எஸ்பி மெஹரா போனில் ராதாவைச் சரணடையச் சொன்னார்.

ராதா வியர்த்து ஸ்தம்பித்தான். குழந்தைகள் அகல்யாவைக் கட்டிக் கொண்டு அழுதன. ராதாவும் அகல்யாவும் தத்தம் கைகளை உயர்த்தியபடி எஸ்பியிடம் நடந்தனர்.

''எ.. என்ன சார் இது?''

''என்னடா நடிக்கறே? புலிகளோட சேர்ந்து பெரிய பெரிய சதி வேலைகள் பண்ணிட்டு அம்மாஞ்சியாட்டம் நடிக்கற?''

''சார்!'' அழுதான்.

''நீங்க தேடும் ராதாகிருஷ்ணன் இவரில்லை. இவர் ஒரு அப்பாவி. தானுண்டு தன் வேலையுண்டு என இருப்பவர்...''

''நோ. இதோ புலியோட டைரில உன் புருஷனின் முழு முகவரி. மிஸ்டர் ராதாகிருஷ்ணன்! 'தடா' சட்டப்படி உங்களைக் கைது செய்கிறோம். அதற்கான அரஸ்ட் வாரண்ட் இது! உங்கள் வீட்டைச் சோதனையிடப் போகிறோம். அதற்கான சர்ச் வாரண்ட் இது!''

கூட்டம் குழுமி வேடிக்கை பார்த்தது. யாரும் ராதாவுக்கு ஆதரவாய்ப் பேச வரவில்லை. பேசினால் தானும் தடா சட்டத்தால் கைது செய்யப்படுவோம் என்ற பயம்.

அகல்யா கதறினாள். ''என் புருஷன் நிரபராதிய்யா...''

''உன் நரப்பு நியாயத்தை வக்கீல் வச்சு கோர்ட்ல சொல்லு...'' ராதா கையிலும் காலிலும் விலங்கிடப்பட்டு ஜீப்பில் ஏற்றப்பட்டான்.

''அகல்யா! குட்டிம்மா... பயப்படாதேம்மா... நியாயம் ஜெயிக்கும். குழந்தைகளை பத்திரமா பாத்துக்க. எங்கம்மாவுக்கு விஷயம் தெரிய வேணாம்... மானஸ்தி... உயிர விட்ருவா...''

போலீஸ் வீட்டுக்குள் புகுந்து துவம்சம் பண்ணியது. திகிலாய் நடப்பதை உன்னித்தனர் குழந்தைகள். காது முழுமையாய்க் கேளாத ராதாவின் அம்மா ஆழ்ந்த நித்திரையில் இருந்தார்.

அகல்யாவுக்கு அது விடியாத இரவானது.

ஒவ்வொரு வக்கீல் வீட்டுக்கும் ஓடினாள்.

''தடா சட்டம்னா ஜாமீனில் வரதே ரொம்பக் கஷ்டம்மா. இப்ப ஒண்ணும் பண்ண முடியாது. நாளைக்கி வாம்மா பாப்போம்...''

**22.10.1992 வியாழன் -**

**3.10.1993 ஞாயிறு**

**ப**திவுத் தபாலைப் பிரித்தாள் அகல்யா. தொழிற்சாலையிலிருந்து வந்திருந்தது. ராதாகிருஷ்ணன் சஸ்பெண்ட் செய்யப்பட்டிருந்தான். சுவரில் சாய்ந்தாள் அகல்யா.

வாசல் கதவைத் திறந்து கொண்டு வீட்டு உரிமையாளர் நுழைந்தார்.

''இந்தாம்மா! உங்களையெல்லாம் நல்லவங்கன்னு நினைக்கத்தான் குடி அமர்த்தினேன். புலி ஆதரவாளருக்கு என் வீட்ல என்ன வேலை? உடனே காலி பண்ணுங்கம்மா...''

''திடீர்னு காலி பண்ணச் சொன்னா எங்கய்யா போறது?''

''கூண்டோட விஷம் சாப்ட்டு செத்துப் போங்க. பூமிக்கு பாரம் குறையும்.''

''இந்த ஒரு வாரத்ல வீட்டைக் காலி பண்றோம். இதுக்கு மேல நீங்க எதுவும் பேச வேண்டாம்...''

''சொன்ன மாதிரி நடந்துக்கங்க...'' அவர் போனவுடன் குழந்தைகள் அகல்யாவின் கால்களைக் கட்டிக் கொண்டன.

அகல்யா ஒரு தமிழ் வார இதழ் உதவியுடன் பயங்கரவாத தடுப்பு சிறப்பு நீதிமன்றத்தில் ராதா சார்பாக ஜாமீன் மனுதாக்கல் செய்தாள். பப்ளிக் பிராஸிக்யூட்டர் வாதத்தைக் கேட்டபின் ஜாமீன் மறுத்து மேலும் ஒரு மாதம் காவல் நீட்டினார் சிறப்பு நீதிபதி. போலீஸ் குற்றப்பத்திரிகை தாக்கல் செய்தது.

**4.10.93 திங்கட் கிழமை காலை**

**11 மணி.**

**சி**றப்பு நீதிமன்றத்தைச் சுற்றி பலத்த போலீஸ் காவல். உள்ளே செல்பவர்கள்

## அருள்வாக்கு

**ஸ்**ருஷ்டியிலே ஈச்வரன் சாச்வத ஆனந்தம் தருவதாக எதொன்றையுமே படைக்கவில்லை. அவனே தர்சனம் தந்தால்கூட அது ஸர்வ கால ஆனந்தமாக இருப்பதில்லை. நாமதேவரைப் போல, ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளைப் போல தினந்தினம் அவனைப் பார்த்துக் கொட்டமடித்தவர்களைக் கூட அவ்வப்போது விட்டுப் பிரிந்து அழ அழவுந்தான் வைத்திருக்கிறான். க்ருஷ்ணனுக்கு ராதை உயிர் என்கிறார்கள். அவளையும் விரஹத்தில் அப்படியே தேஹமே சிதறிப் போய் விடுகிறாற் போலத் துடிக்கத்தான் விட்டிருக்கிறான். ஆசைப்பட்டால் அழுதுதான் ஆகணும் என்றே இப்படியெல்லாம் வைத்திருக்கிறான். அவனை வெளியிலே வேறாக வைத்து ஆனந்தப்படுகிறவரை அதுவும் சாச்வத ஸுக



மில்லை, அத்வைதம் தவிர எல்லாம் துக்கம்தான் என்று காட்டவே இப்படிப் பண்ணுகிறான் போலிருக்கிறது.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

மெட்டல் டிடக்டரால் சோதனை செய்யப்பட்டனர்.

நீதிபதி, ''இந்த வழக்கில் 32வது எதிரியாகச் சேர்க்கப்பட்டுள்ள திரு. ராதாகிருஷ்ணனுக்கும் சதியாளர்களுக்கும் எந்தவித தொடர்பும் இல்லை என நம்புகிறேன். காவல் துறை, ராதாகிருஷ்ணனின் வீட்டில் கைப்பற்றியதாகக் கூறும் ஜெலட்டின் குச்சிகள் உண்மையில் வேறொரு எதிரி இருப்பிடத்திலிருந்து கைப்பற்றப்பட்டதாக 12வது எதிரி மார்ட்டினின் வாக்குமூலம் கூறுகிறது. அதைவிட முக்கியமாக, 11 மாதங்களுக்கு மேல் கோமாவில் கிடந்த திலீபன், தன் மரண வாக்குமூலத்தில் ராதாகிருஷ்ணனுக்கும் சதியாளிகளுக்கும் தொடர்பில்லை எனக் கூறியிருக்கிறார். இவற்றையெல்லாம் கணக்கில் வைத்து திரு. ராதாகிருஷ்ணனை இவ்வழக்கிலிருந்து குற்றமற்றவராய்க் கருதி விடுவிக்கிறேன். இந்த ஒரு வருடத்தில் திரு. ராதாகிருஷ்ணனுக்கு ஏற்பட்ட மன உளைச்சல்களுக்கு இந்த நீதிமன்றம் வருந்துகிறது!'' தீர்ப்பளித்தார். ராதா தலைக்கு மேல் கும்பிட்டு அழுதான்.

நீதிமன்ற வராண்டாவில் -

சிபிஐ அதிகாரி, ''ராதா! எங்களை மன்னிச்சிரு. நாங்க தேவதாசிகள் மாதிரி. எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் படுக்கை விரிக்கணும். தீவிரவாதத்தை விதைத்து விட்டு மரணத்தை அறுவடை செய்கிறார்கள் அரசியல்வாதிகள். அரசியல் நிர்ப்பந்தத்தால் நாங்கள் கைது செய்யும் பத்து பேரில் இருவர் நிரபராதிகள். போகட்டும். இனியாவது அந்நியர்களிடம் ஜாக்கிரதையாய் இரு!'' என்றார்.

அகல்யா கணவனைக் கட்டிக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

### 23.10.1993 சனிக்கிழமை காலை
### 10:30 மணி

நீதிபதியின் தீர்ப்பு நகலை இணைத்து - தன்னை மீண்டும் பணியில் அமர்த்துமாறு மேனேஜிங் டைரக்டரிடம் மனு அளித்திருந்தான் ராதாகிருஷ்ணன்.

எம்.டி., ராதாவை திரும்பப் பணிக்கு அமர்த்தும் ஆணையை கையளித்து ''நியாயம் ஜெயிச்சிருக்கு ராதா. உங்களுடைய ஒரு வருட சஸ்பென்ஷன் காலம் - முதல் ஆறு மாதம் சம்பள விடுப்பாயும் பின் ஆறு மாதம் சம்பளமில்லா விடுப்பாயும் கருதப்படும்...'' என்றார்.

''நன்றி சார்!'' என்றான் ராதா.

### 8.11.1993 திங்கட் கிழமை
### இரவு 10:40 மணி

இரவு ஷிப்ட் முடிந்து சைக்கிளில் புறப்பட்டான் ராதா. உடல்நலம் தேறியிருந்தான். அவனது புது வாடகை வீடும் பேருந்து நிலையம் தாண்டித்தான். ராதா பேருந்து நிலையத்தைத் தாண்டும் போது பிளாட்பார இருட்டிலிருந்து ஒரு யுவன் வெளிப்பட்டான்.

''சார்!''

சைக்கிளை நிறுத்திக் காலை ஊன்றினான் ராதா. ''என்ன... சொல்லுங்க...''

''செங்கல்பட்டு பக்கத்துல ஏதோ கலாட்டாவாம். பஸ்ஸெல்லாம் நிறுத்திட்டாங்க சார். இன்னைக்கி ராத்திரி மட்டும் தங்க உதவி செஞ்சீங்கன்னா புண்ணியமாப் போகும்...''

திடுக்கிட்டான் ராதா. கடந்த கால கசப்பான அனுபவத்தில் தலையை பலமாக ஆட்டியபடி சைக்கிளை தள்ளிக் கொண்டு போனான். யோசனையில் நின்றான்.

விருந்தோம்பல் குணம் என் தாத்தா வழி - தந்தை வழி - என் இரத்தத்துக்கு வந்தது. உண்ணும் கவளத்தைக் கேட்டாலும் விருந்தாளிக்கு ஊட்டியவர் என் தாத்தா. 24 மணி நேரமும் சமையல் அடுப்பு அணைக்காமல் விருந்து உபசரித்தவர் என் தந்தை. பிரச்னை வந்ததற்காக என் பிறவிக் குணத்தை ஒருக்காலும் மாற்றிக் கொள்ள மாட்டேன். I AM ALWAYS OPTIMISTIC... என்னுடைய மனைவியும்...''

திரும்பி புன்னகை முகமாய், ''வாங்க சார்... என் வீட்ல தங்கி சாப்பிட்டுக் காலைல போகலாம்...'' என்றான் ராதாகிருஷ்ணன்.



## அஹிம்சா மூர்த்திக்கு ஓர் அஞ்சலக் கடிதம்!

வெள்ளை இருட்டை
விரட்டியடித்த
கறுப்பு வெளிச்சமே!

இங்கே -
நாட்டின் நந்தவனங்கள்
சிலரின்
சொந்த வனங்களாகி விட்டன.

தேசம் குலையாமல்
காப்பதைவிடப்
பதவி மோகம்
கலையாமல் காப்பதே
கடமையாகி விட்டது.

இன்றிருந்தாயானால்
உனக்குத்
தொகுதி ஒதுக்கித்
தகுதி பார்த்திருப்பார்கள்.

இந்தியாவின் குறுக்கே
கோடுபோடுவதையே
விரும்பாதவனே!
நதிகளின் குறுக்கே கூடக்
கோடு போட்டு விட்டது
தெரிந்தால்
என்ன செய்வாய்?

துறவிகளின் வீதியில்
நடப்பதுபோல்
இரவுகளில், வீதியில்
கன்னிப்பெண் நடக்கக்
கனவு கண்டவனே!

சாதிசமய, பதவி
பேதமின்றிச்
சரிசமமாய் நடப்பது
கற்பழிப்புகள்தான்.

தேசத்திற்காகவே
தேய்ந்து மடிந்தவனே!
உனது உண்ணாவிரதத்தால்
வன்முறைக்கு
முற்றுப் புள்ளியிட்டாய்!
நாங்களோ
பிள்ளையார் சுழிபோட்டோம்.
சுதந்திரத்தைக் கூட

முதன் முதலில்
உன்னைச்
சுடுவதற்குத்தானே
பயன்படுத்தினோம்!

ஒன்று தெரியுமா உனக்கு?
ஒரேயடியாய் உன்னை
மறந்து விடுவது
அவமானம் என்பதாலும் -
உனது சமாதிகளில்
கிடைக்கிற இலவச
விளம்பரங்களுக்காகவுமே
சனவரி முப்பது
சர்வோதயம் ஆனது!

அண்ணலே!
இருட்டில் கிடக்கும்
இளைய உள்ளங்கள்
எழுச்சி பெற வேண்டும்
கவர்ச்சியில் மயங்கும்
காளையர்
கண்திறக்க வேண்டும்.

ஒரு பறவை
தன் சிறகைத்தானே
சிக்கெடுத்துக் கொள்வது
மாதிரி -

நமக்கு நாமே
தீர்வுகாணும்
பொருளாதாரத் திட்டங்கள்
உருவாக வேண்டும்.

தானியங்கிக்
கடிகாரம் போல்
வாழ்க்கை
சீராக நடக்க வேண்டும்.

என்ன செய்யலாம் இதற்கு?
பாடப் புத்தகங்களால்
பிரயோஜனம்
ஒன்றுமில்லை.
ஒரே வழி -
மறுபடி பிறந்து வா
நீ!

- சகாயதாஸ்



## பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது நாள் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 120 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஓர் நாள் உணவளிக்க,உணவு வகைகளை அனுசரித்து சுமார், முறையே ரூ. 300/- அல்லது 500/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 3000/- அல்லது 5000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்குகொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்ப வேண்டிய பொருளும் முகவரியும் :

**அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**
**D76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,**
**கும்பகோணம் - 612 001.**

## வேத வைதிக நூல்கள் (விலை தபால் செலவு உட்பட)

I

1. ரிக்வேத ஸம்ஹிதா - நாகராக்ஷரம் - 10 மண்டலங்கள் விலை ரூ. 265/-
2. ரிக்வேத சிருங்கலா - நாகராக்ஷரம் - விலை ரூ. 60/-
3. யஜுர்வேத தைத்திரீய ஸம்ஹிதா - நாகராக்ஷரம் - 7 காண்டங்கள் - விலை ரூ. 165/-
4. ஸாமவேத ஸம்ஹிதா - க்ரந்தாக்ஷரம் - 2 பாகங்கள்
   (முதல் பாகம் - ரூ. 165/-, இரண்டாம் பாகம் - ரூ. 210/-)
5. ஸாமவேத அஷ்டப்ராம்மணம் - நாகராக்ஷரம் - 3 பாகங்கள்
   (முதல் பாகம் - ரூ. 210/- இரண்டாம் பாகம் - ரூ. 110/- மூன்றாம் பாகம் - ரூ. 65/-)
6. ஸாமவேத பூர்வாபர ப்ரயோகம் - க்ரந்தாக்ஷரம் - ரூ. 80/-
7. சாந்தி குஸுமாகரம் (2 பாகங்கள்) - விலை ரூ. 170/-
   (1 ம் பாகம் ரூ. 85/- 2 ம் பாகம் ரூ. 85) (க்ரந்தாக்ஷரம்)

II கிரந்தாக்ஷரத்தில் காரிகையுடன் பிரம்மஸ்ரீ முத்துச்ரௌதிகளால் பதிப்பிக்கப்பட்ட கிரந்தங்களின் மறுபதிப்புகள்

1. போதாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 95/-
2. ஆபஸ்தம்ப பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 90/-
3. ஆபஸ்தம்ப ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 55/-
4. ஆச்வலாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 65/-
5. ஆச்வலாயன ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 50/-
6. கல்ப சிந்தாமணி - ரூ. 55/-

III நாகராக்ஷரம்

1. மனாசேச்லோக - ராமமந்த்ராசே ச்லோக - ரூ. 25/- (மராத்தி மூலம் தமிழ் பதவுரை)
2. ஸ்ரீ ராதாகிருஷ்ண பூஜாவிதானம் - ரூ. 25/- (ஸம்ஸ்கிருதமூலம் - தமிழ் பதவுரை)
3. நவோதந்தம் - நைஷதகாவ்யத்தின் சுருக்கம் - ரூ. 25/- (ஸம்ஸ்கிருத மூலம் - ஆங்கில பதவுரை)
4. வேதபாட வழிமுறை (syllabus) ரிக், யஜுர், ஸாம - ரூ. 25/-
5. ரகோதந்தம் - நாகராக்ஷரம் - விலை ரூ. 25/-

V.P.P. யில் அனுப்புவதில்லை. முழுத் தொகையையும் M.O. (or) Draft மூலம் கீழே குறிப்பிட்டுள்ள முகவரிக்கு அனுப்பவும். செக் மூலம் அனுப்ப வேண்டாம். "எமது நூல்கள் பற்றிய விவரமான கேட்லாக் வாங்க விரும்புவோர் ரூ. 3/- தபால்தலை அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்."

**பிரஸிடெண்ட் - டிரஷரர் - A.V.M.S.G.D.P.S. ஸமிதி, D-76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம் - 612 001.**

நேரில் வாங்க விரும்புவோர் கண்டிப்பாக - ராஜா வேதகாவ்ய பாடசாலை, யாகசாலை தெரு, (சக்கரை படித்துறை அருகில்) கும்பகோணம் - 612 001 என்ற விலாசத்தில் பெற்றுக் கொள்ளவும்.

## 33. சாவடிக்குப்பம்

நல்லானின் மச்சான், சம்பு சாஸ்திரியைப் பார்த்த அன்று இரவு வெகு உற்சாகமாகச் சாவடிக்குப்பத்தில் தன் வீட்டுக்குப் போனான். அந்தச் செய்தியை நல்லானுக்குச் சொன்னால் அவன் ரொம்பவும் சந்தோஷமடைவானென்று அவனுக்குத் தெரியும்.

''இன்னிக்கு நான் ஒத்தரைப் பாத்தேன்! அது யாருன்னு சொல்லு பார்க்கலாம்'' என்றான் நல்லானிடம்.

''நீ யாரைப் பார்த்தா என்ன, பாக்காட்டி என்ன? எனக்கு சாஸ்திரி ஐயாவைப் பாக்காமே ஒரு நிமிஷம் ஒரு யுகமாயிருக்கு. நெடுங்கரைக்கு ஒரு நடை போய் அவங்களைப் பார்த்துட்டு வந்தாத்தான் என் மனசு சமாதானம் ஆகும். இல்லாட்டி, நான் செத்துப் போனேன்னா என் நெஞ்சுகூட வேவாது'' என்றான்.

''அப்படியானா, நெடுங்கரைக்குப் போயிட்டு வர்ற பணத்தை எங்கிட்டக் கொடு'' என்றான் சின்னசாமி.

''என்னத்திற்காக உங்கிட்டக் கொடுக்கிறது?''

''கொடுத்தேன்னா, சாஸ்திரி ஐயாவை நான் இவ்விடத்துக்கே வரப் பண்றேன்.''

''என்னடா உளறதே!'' என்று நல்லான் கேட்டான்.

''நான் ஒண்ணும் உளறலை. சாஸ்திரி ஐயா இப்போது நெடுங்கரையிலே இல்லை. இந்த ஊரிலேதான் இருக்காரு. இன்னிக்கு அவரைத்தான் பார்த்தேன்'' என்றான்.

நல்லான் தூக்கி வாரிப் போட்டுக் கொண்டு எழுந்திருந்தான். ''அடே! இந்த வெஷயத்திலே மட்டும் எங்கிட்ட விளையாடாதே! நெஜத்தை நடந்தது நடந்தபடி சொல்லு!'' என்றான்.

சின்னசாமி விவரமாகச் சொன்னான். அவன் எதிர்பார்த்தபடியே நல்லானுக்குச் சந்தோஷம் உண்டாயிற்று. கடைசியில், ''போவட்டும்; இந்தமட்டும் ஐயாவைப் பார்த்துப் பேசறத்துக்கு ஒனக்குத் தோணித்தே; அது நல்ல காரியந்தான். ஐயா எவ்விடத்திலே இறங்கியிருக்காருன்னு கேட்டுண்டியா?'' என்றான்.

''அது கேக்க மறந்துட்டேன்; ஆனா, ஐயாவைத் தான் நான் சாவடிக்குப்பத்துக்குக் கட்டாயம் வரணும்னு சொல்லியிருக்கேனே?''

''அட போடா, முட்டாள்! நீ சொன்னதுக்காக ஐயா வந்துடுவாங்களா? அவங்களுக்கு ஏற்கெனவே என் மேலே கோபமாச்சேடா, அவங்க பேச்சைத் தட்டிண்டு நான் பட்டணத்துக்கு வந்ததுக்காக? என்னைத் தேடிக்கிட்டு எங்கேடா வரப்போறாரு?'' என்றான் நல்லான்.



ஆகவே, முடிவில் சின்னசாமிக்கு அவன் சாஸ்திரியாரைப் பார்த்து வந்ததன் பலனாக வசவு தான் கிடைத்தது. நல்லானுடன் அவனுடைய மனைவியும் சேர்ந்து கொண்டு தன் தம்பியைத் திட்டினாள். ''மறந்துட்டேன், மறந்துட்டேங்கறயே, வெக்கமில்லாமே? சோறு திங்க மறப்பயா?'' என்று அவள் கேட்டாள்.

பிறகு இரண்டு நாள் நல்லானும் அவன் மச்சானுமாகச் சேர்ந்து,

# தியாக பூமி



கன்னு ஒரு வார்த்தை கேக்காமே வந்துட்டானே?'' என்று ஒரு நாளைக்கு முப்பது தடவை அவன் சொல்லிக் கொண்டிருந்தான். ஒரு நாள் அதிகாலையில் அவன் எழுந்திருந்து வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு, 'சாஸ்திரி ஐயாவை ஒருவேளை இந்த ஜன் மத்திலே காண முடியாமலேயே போய்விடுமோ?' என்று யோசித்துக் கொண்டிருந்தான். அப்போது பின் பனிக் காலமாகையால், பொழுது விடிந்திருந்தும் பனி பெய்து கொண்டிருந்தது.

திடீரென்று அவனுக்குப் பின்னால், ''அப்பா! நெடுங்கரை நல்லான் என்பவன் வீடு இங்கே எங் கிருக்கு?'' என்று ஒரு குரல் கேட்டது. அந்தக் குரல் அவ னுக்குத் தெரியாமல் போய்விடுமா? திடுக்கிட்டு எழுந் திருந்து திரும்பிப் பார்த்தான். சாஸ்திரி ஐயாதான்.

''சாமி! சாமி! இந்த ஏழையைத் தேடிக்கிட்டு வந் தீங்களா?'' என்று நாத் தழுதழுக்கக் கூறினான்.

அப்போது அவனுடைய பார்வை சாஸ்திரியின் கைகளில் ஏந்தியிருந்த பொருளின் மேல் விழுந்தது. அது ஒரு சின்னஞ் சிறு குழந்தை!

''இது என்னங்க? கொழந்தை ஏதுங்க?''

''நல்லான்! இந்த உலகத்தைத் துறந்து சந்நியாசி யாகலாம் என்றிருந்தேன். அப்போது பகவான் இந்தக் குழந்தையைக் கொடுத்தார். எனக்கு வேறு போக்கிடம் இல்லாததால் உன்னைத் தேடிக் கொண்டு வந்தேன், அப்பா!'' என்றார் சாஸ்திரியார்.

''அப்படிச் சொல்லாதீங்க, சாமி! உங்களுக்கா போக்கிடமில்லை? நான் பூர்வ ஜென்மத்திலே செய்த பாக்கியம், நீங்க வந்தீங்க'' என்று நல்லான் சொல்லி, ''திக்காதீங்க, உக்காந்து எல்லாம் வெவரமாய்ச் சொல் லுங்க'' என்றான்.

சாஸ்திரியார் மடியில் குழந்தையுடன் அந்தக் குடி சையின் திண்ணையில் உட்கார்ந்தார். எல்லாம் விவர மாய்ச் சொன்னார். சாவித்திரியும் நல்லானும் ஊரை விட்டுப் போன பிறகு நெடுங்கரை வாழ்க்கை தமக்குப் பிடிக்காமற் போனதும், இந்தச் சமயத்தில் பெரியம்மா, பட்டணத்துக்குப் போய்ப் பாட்டுச் சொல்லிக் கொடுத் துப் பணம் சம்பாதிக்கும்படி யோசனை சொன்னதும், அதை ஒரு சந்தர்ப்பமாக வைத்துக் கொண்டு தான் கிளம்பி வந்ததும், பட்டணத்தில் அநேக வீடுகளில் பாட்டு வாத்தியார் வேலைக்காக அலைந்ததும், எங்கும் வேலை கிடைக்காததும், கடைசியில் உலக வாழ்க்கையை விட்டுச் சந்நியாசியாகலாமென்று தீர்மானித்ததும், அந்தத் தீர்மானத்துக்குப் பிறகு எவ் விடம் போகிறோம் என்ற உத்தேசமில்லாமல் கால் போன வழியில் நடந்து சென்றதும், நடந்ததனால் களைப்பு அடைந்து ஓரிடத்தில் உட்கார்ந்ததும், உட்கார்ந்த இடத்தில் தூக்கம் வந்து படுத்துத் தூங்கியதும் - எல்லாம் சொல்லி விட்டு, கடைசியில், ''அப்பா! தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டபோது பக்கத்தில் குழந்தை அழும் குரல் கேட்டது. யாராவது அக்கம் பக்கத்தில் இருப்பார்களோ என்று பார்த் தேன். சுற்று முற்றும் தேடினேன். சத்தம் போட்டும் பார்த் தேன். ஒருவரும் ஏனென்று கேட்கவில்லை. சரி, நாம் உலகத் தைத் துறப்பது பராசக்திக்கு விருப்பமில்லை, ஆகையால் தான் இந்தப் பந்தத்தை நமக்கு அளித்திருக்கிறாள் என்று

அந்தப் பக்கத்திலுள்ள பிராம்மணாள் ஹோட்ட லில் எல்லாம் போய், ''நெடுங்கரைச் சம்பு சாஸ்திரியார் இருக்காரா?'' என்று கேட்டார்கள். ''நெடுங்கரையையும் காணோம், சம்பு சாஸ்திரி யையும் காணோம்'' என்ற பதில்தான் வந்தது.

நல்லானுக்கு இதே கவலையாய்ப் போயிற்று. ''கைக்கெட்டினது வாய்க் கெட்டாமல் போச்சே, இந்த முட்டாளாலே! எங்கே தங்கியிருக்கீங்

**அமரர் கல்கி**



திருமதி பாக்கியலட்சுமி

# கடுமையான மூட்டுவலி, ஆஸ்துமாவிலிருந்து நான் விடுபட்டது எப்படி?

மூட்டுவலி, ஆஸ்துமாவிலிருந்து விடுபெற்று வாழும்
நோயாளியின் கடிதமும் முகவரியும் இது.

**திருமதி. பாக்கியலட்சுமி சொக்கலிங்கம்,**
கதவு எண் 12 (பிளாட்-4) பசும்பொன் நகர், பம்மல், சென்னை - 75.

அன்புள்ளம் கொண்ட நிறுவனர், Dr. J.V.G. சேகர் அவர்கட்கு,

கடந்த மூன்று ஆண்டுகளாக கால், கை, இடுப்பு, கழுத்து, விரல்கள் என அனைத்து மூட்டுக்களிலும் கடுமையான வலி ஏற்பட்டு, நீட்ட மடக்க முடியாமல், தினசரி வேலைகளையும் செய்ய முடியாமல் இருந்தேன். இப்படி இருந்த எனக்கு சளி, இருமல், தூசி அலர்ஜி போன்ற தொல்லைகளும் மேலும் இருக்க மிகுந்த தொல்லைக்கு ஆளானேன். இச் சிறு வயதில் நான் பட்ட துன்பத்திற்கு அளவே இல்லை எனலாம்.

எங்கள் குடும்பத்தில் சிலர் இதுபோன்ற மூட்டுவலி, சளித் தொல்லையால் கஷ்டப்பட்டு, பல சிகிச்சை களை மேற்கொண்டும் குணமாகாமல் இறுதியில் தவறி விட்ட நிகழ்ச்சிகள் எல்லாம் என்னை மேலும் அச்சுறுத்தின. இப்படி பயந்து கொண்டிருந்த நான், தங்களிடம் குணமடைந்த ஒருசிலர் சொல்லக் கேட்டு, நேரில் தங்களிடம் வந்து ஆலோசனைப் பெறும் போதுதான் ஆறுதல் அடைந்தேன்.

இன்று சளி, அலர்ஜி, இருமல், வெள்ளைப்படுதல் மற்றும் கடுமையான மூட்டுவலியிலிருந்து விடுபெற்று மிகவும் சந்தோஷத்துடன் என் வீட்டு வேலைகளை செய்ய முடிகின்றது என்றால் அதன் சிறப்பு தங்கள் மருத்துவத்திற்கே சேரும் என்று கூறுவதோடு மட்டுமில்லாமல் தங்களுக்கும், தங்களுடன் பணிபுரியும் டாக்டருக்கும் நன்றியையும் கூறுகின்றேன். இன்றும் தங்கள் அறிவுரைப்படி உணவுமுறைகள், சூரியக் குளியல் (Sun-Bath) இவைகளை கடைப்பிடிக்கின்றேன். வணக்கம். நலம்.

நன்றியுடன்,
பாக்கியலட்சுமி சொக்கலிங்கம்



Dr. J. V. G. சேகர்

ஆலோசனைக்கு நேரிலோ அல்லது ரூ. 2/-க்கான தபால்தலை அனுப்பி
தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

இயற்கை நல மூலிகை மருத்துவர்

**நிறுவனர், Dr. J.V.G. சேகர், Ph.D. (மருத்துவம்) போன் : 8257059**
**காந்திஜி இயற்கை நலவாழ்வு நிலையம் - சர்க்கரை நோய் ஆராய்ச்சி மையம்**
**43/2 விஜயராகவா ரோடு, (வாணிமஹால் அருகாமையில்)**
**தி.நகர், சென்னை - 600 017.**
**(ஆலோசனை நேரம் : தினமும் காலை 10 மணி முதல் 1 மணி வரை)**



தீர்மானித்துக் கொண்டேன். உன் மைத்துனன், 'சாவடிக்குப்பம்' என்று சொல்லியிருந்தது ஞாபகத்தில் இருந்தது. விசாரித்துக் கொண்டு வந்து சேர்ந்தேன். நல்லான்! உன் மச்சான் என்னை உன் வீட்டுக்கு வரும்படி அழைத்தபோது, 'கேவலம் நல்லானிடம் போயா ஒத்தாசை கேட்பது?' என்று எண்ணினேன். அப்படி நான் கர்வப்பட்டது பிசகு என்று பகவான் புத்தி கற்பித்து விட்டார்'' என்றார்.

நல்லான், ''சாமி! அப்படிச் சொல்லவே சொல்லாதீங்க. சாவடிக்குப்பம் கொடுத்து வச்சதுங்க, நீங்க வர்றதுக்கு. அதனாலே வந்தீங்க. இங்கே உங்களுக்குத் தனியா ஒரு குடிசை போட்டுத் தர்றோமுங்க. அதிலே நீங்களும் குழந்தையுமா இருந்துக்கிட்டு, எங்களுக்கெல்லாம் கதை, புராணம் சொல்லிக் கடைத்தேற்றுங்க!'' என்றான்.

அன்று மத்தியானத்துக்குள், சாஸ்திரியாருக்காக ஒரு தனிக் குடிசை போட்டாயிற்று. நல்லான் மனைவி வந்து குடிசையில் குழந்தைக்காக ஒரு தூளி போட்டுக் கொடுத்தாள். நல்லான் குழந்தைக்குப் பாலுக்காக ஓர் ஆடு கொண்டு வந்து கட்டினான்.

சாயங்காலம் புதுக் குடிசையின் வாசலில் சாஸ்திரியும் நல்லானும் நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது, கொஞ்ச தூரத்தில் ஏதோ கலாட்டா நடந்து கொண்டிருந்தது. ஐந்தாறு பேர் கும்பலாக நின்று, சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். காதால் கேட்க முடியாத துர்ப்பாஷையில் அவர்கள் ஒருவரையொருவர் திட்டிக் கொண்டிருந்தார்கள்.

''சாமி! இந்த ஜனங்கள் எல்லாம் உங்களாலேதான் சீர்திருந்தணும்'' என்று நல்லான் சொன்னான்.

சாஸ்திரி சுற்று முற்றும் பார்த்தார். தெரு வெல்லாம் ஒரே குப்பையும் அசிங்கமுமாயிருந்தது. அந்தக் குப்பைக்கும் அசிங்கத் துக்குமிடையில் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய பரட்டைத் தலையும் அழுக்கு உடம்பும் கந்தல் துணியும் பார்க்க முடியாதபடி இருந்தன. நாலு பக்கத்திலிருந்தும் துர்நாற்றம் வந்து கொண்டிருந்தது.

இத்தனைக்கும், சாவடிக்குப்பம் இருந்த இடம் அழகும் வசதியும் பொருந்தியது. சுற்றிலும் மரங்கள் அடர்ந்து, நிழல் தந்து கொண்டிருந்தன. தெரு விஸ்தாரமாக இருந்தது. ;' பட்டணத்தின் எல்லைக்கு வெளியே சற்றுத் தூரத்தில் இருந்தபடியால், இவ்வளவு விஸ்தாரமாக அவர்கள் குடிசை கட்டிக் கொள்ளுவது சாத்தியமாயிற்று. இவ்வளவு சௌகரியமான இடத்தைத்தான், நாளெல்லாம் மற்றவர்களுடைய பங்களாக்

களைச் சுத்தமாக்கி அழகுபடுத்திவிட்டு வந்த அதே ஏழை ஜனங்கள் அவ்வளவு ஆபாசமாக வைத்துக் கொண்டிருந்தார்கள்.

சாஸ்திரி இதையெல்லாம் பார்த்தார். இந்தச் சாவடிக்குப்பத்து ஜனங்களுக்குச் சேவை செய்வதற்காகவே, பகவான் ஒரு குழந்தையைக் கொடுத்துத் தம்மை மறுபடியும் சம்சாரியாக்கி அவ்விடம் அனுப்பி யிருப்பதாக அவர் மனத்தில் தோன்றிற்று. இது தனக்குப் புனர்ஜன்மம் என்றும், இனிமேல் பழைய வாழ்க்கைக்கும் தமக்கும் சம்பந்தமில்லையென்றும் தீர்மானித்துக் கொண்டார்.

அன்றிரவு, சம்பு சாஸ்திரி தமது புதுக் குடிசையில் பஜனை செய்ய ஆரம்பித்தார். நல்லானும் அவன் மனைவியும் மைத்துனனுந்தான் முதலில் பஜனைக்கு வந்தார்கள். நாளடைவில் சாவடிக்குப்பத்து ஜனங்கள் ஒவ்வொருவராகப் பஜனைக்கு வர ஆரம்பித்தார்கள்.

ஆறு வருஷ காலத்தில் சாவடிக்குப்பம் அடையாளமே தெரியாதபடி மாறுதல் அடைந்தது. குப்பத்து ஜனங்களின் வாழ்க்கை முறையும் அடியோடு மாறிற்று.

இந்தக் காலத்தில், பராசக்தி சம்பு சாஸ்திரிக்கு அளித்த குழந்தை சாருவும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தாள்.

## நாலாம் பாகம்

## இளவேனில்

"செந்தா மரை விரியத் தேமாங்
கொழுந்தொழுக
மைந்தா ரசோகம் மடலவிழ......"
"மன்னுயிரெல்லா மகிழ்துணை
புணர்க்கும்
இன்னிள வேனில்."

– இளங்கோவடிகள்

## 34. சாருவின் பிரார்த்தனை

கீழ்வானம் வெளுத்தது. காலைப் பிறை, ஒளி இழந்து மங்கிற்று. அதனருகில் தோன்றிய சுக்கிரன் இதோ மறையப் போகிறேன் என்று கண் சிமிட்டிச் சமிக்ஞை செய்தது.

கோழி கூவிற்று; குருவி சிலும்பிற்று; காகம் கரைந்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் நானாவிதமான பட்சி ஜாலங்கள் பற்பல ஸ்வரங்களில் பாடத் தொடங்கின.

விருட்சங்களிலும் செடிகளிலும் இருந்த பூ மொக்குகள், பட்சிகளின் இனிய கானத்

தைக் கேட்டு ஆனந்தத்தினால் சிலிர்த்தன.

அந்தக் குளிர்ந்த அதிகாலை நேரத்தில் வீசிய இனிய இளந்தென்றல் சற்று விரிந்த பூ இதழ்களின் மீது தவழ்ந்து சென்று நாலு பக்கமும் நறுமணத்தைப் பரப்பிற்று.

பட்சிகளின் கீதத்துக்குச் சுருதி போடுவதுபோல் தூரத்தில் கடலின் 'ஹோ' என்ற ஓசை இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருந்தது.



"நம்ம தலைவருக்குக் கலா ரசனை அவ்வளவா போறாதுன்னு நினைக்கிறேன்..."

"ஏன், என்னாச்சு?"

"குச்சிப்புடி நடனத்தைப் பார்த்துட்டுப் பாராட்டிப் பேசும்போது 'குச்சி பிடிக்காமலே ஆடினாலும் ஆட்டம் நன்றாயிருந்தது'ன்னு பேசிட்டார்....!"

- பிஸ்வா.

சம்பு சாஸ்திரி படுக்கையில் எழுந்து உட்கார்ந்து மனோகரமான பூபாள ராகத்தில், "கௌஸல்யா ஸுப்ரஜா ராமா" என்ற ராமாயண சுலோகம் சொல்லிக் கொண்டிருந்தார்.

"தாத்தா! தாத்தா!" என்றாள் சாரு.

"முழிச்சுண்டயா, அம்மா! எங்கே, எழுந்து உட்காரு" என்றார் சம்பு சாஸ்திரி.

"நான் முழிக்கக்கலை; இன்னும் தூங்கிண்டுதான் இருக்கேன்" என்றாள் சாரு.

"அப்படின்னா, தூங்கினபடியே, நேத்திக்கு ஸரஸ்வதி ஸ்தோத்திரம் சொல்லிக் கொடுத்தேனே, அதைச் சொல்லு பார்க்கலாம்" என்றார் சாஸ்திரி.

சாரு, உடனே எழுந்து உட்கார்ந்தாள். "எங்கே, சொல்லிக் கொடு தாத்தா, சொல்றேன்" என்றாள்.

சாஸ்திரி, "ஜய ஜய தேவி தயாலஹரி" என்ற கீதத்தை ஆரம்பித்துச் சொல்லிக் கொடுத்தார். சாருவும் சொல்லிக் கொண்டு வந்தாள். ஆனால், பாதிப் பாட்டில் திடீரென்று அவள் நிறுத்திவிட்டு, "தாத்தா! தாத்தா! கொஞ்சம் இரு தாத்தா, வர்றேன்!" என்று கூறிவிட்டு, வாசலில் ஓடினாள்.

ஒரு நிமிஷத்துக்கெல்லாம், "தாத்தா! இங்கே வாயேன், சீக்கிரம் வாயேன்" என்று சாரு வாசலிலிருந்து கூவுவதைக் கேட்டு, சாஸ்திரிகள் குடிசைக்கு வெளியே வந்தார்.

"பார்த்தயா, தாத்தா! நம்மாத்துச் செடியிலே ரோஜாப் பூ பூத்திருக்கு. நேத்தி சாயங்காலம் மொட்டாயிருந்தது. இப்பப் பூவாய்ப் போயிடுத்து, தாத்தா!" என்று கூச்சலிட்டாள்.

சம்பு சாஸ்திரி, வைகறையின் மங்கிய வெளிச்சத்தில், அந்த மலர்ந்த ரோஜாவையும், சாருவின் மலர்ந்த முகத்தையும் மாறி மாறிப் பார்த்துச் சந்தோஷப்பட்டார்.

சாரு, பூவைத் தொடுவதற்குப் போனாள். கையில் சுருக்கென்று முள் குத்தவே, "அப்பப்பா!" என்று கையை உதறினாள்.

"தாத்தா! நேத்திக்கு எங்க டீச்சர் கூடச் சொன்னா, ரோஜாப் பூவிலே முள் இருக்காப்பலே, சுகத்திலேயும் கஷ்டம் இருக்கும்னு. ஸ்வாமி என்னத்துக்காக தாத்தா, இவ்வளவு அழகான பூச்செடியிலே கொண்டு போய் முள்ளை வைச்சிருக்கார்?" என்று கேட்டாள்.

"சாரு, உலகத்திலே எல்லாரும் அப்படித்தான் சொல்ற வழக்கம். ரோஜாவிலே முள் இருக்கேன்னு வருத்தப்படுவார்கள். ஆனால், ஒரு பெரியவர் இதை வேறு தினுஸாகச் சொல்லியிருக்கார்; 'ரோஜாவிலே முள் இருக்கேன்னு வருத்தப்படக் கூடாது; முள்ளிலே ரோஜா இருக்கேன்னு சந்தோஷப்படணும்' என்று அவர் சொன்னார். அந்த மாதிரிதான், உலகத்திலும் சுகத்துக்கு நடுவிலே கஷ்டம் இருக்கேன்னு வருத்தப்படக்கூடாது; இவ்வளவு கஷ்டத்துக்கு நடுவிலே சுகமும் இருக்கேன்னு சந்தோஷப்படணும்" என்றார் சாஸ்திரி.

இந்தத் தத்துவமெல்லாம் சாருவுக்குச் சரியாகப் பிடிபடவில்லை. ஆகவே, "சரி, தாத்தா! நான் பல்தேய்க்கப் போறேன், தாத்தா!" என்று போய்விட்டாள்.

சற்று நேரத்துக்கெல்லாம் நல்லான் மனைவி வந்து சாருவுக்குத் தலையை வாரிப் பின்னிவிட்டாள். கையில் சங்கு வளையல்களும், கழுத்தில் மணி மாலைகளும் போட்டு அலங்காரம் செய்தாள். இதற்குள் தாத்தா காய்ச்சி வைத்திருந்த பாலைச் சாப்பிட்டுவிட்டு, சாரு அவரிடம் சொல்லிக் கொண்டு பள்ளிக்கூடம் கிளம்பினாள். அவளுடன் சாவடிக்குப்பம் குழந்தைகள் இன்னும் சிலரும் புறப்பட்டார்கள்.

பள்ளிக்கூடத்துக்குக் கொஞ்ச தூரம் அவர்கள் நடந்து போயாக வேண்டும். வழியில் அவர்களுடைய கண்ணில் பட்ட மரங்கள் எல்லாம் பழைய காய்ந்த இலைகள் உதிர்ந்து போய், புதிய இளந்தளிர்கள் விட்டுத் தளதளவென்று காணப்பட்டன. மாமரங்களில் புதுத் தளிர்களுடன் பூக்களும் நிறைந்திருந்தன. இதனால் உலகமே



"உங்க ஆபீஸ் முனுசாமி மட்டும் ரொம்ப நேர்மையானவர்னு எப்படி சொல்றீங்க?"

"சும்மா சொல்லலய்யா, வாங்கற லஞ்சத்துக்கு ஒழுங்கா வேலை செய்வார்!"

- வி.சி. கிருஷ்ணரத்தினம்.

புதுமை பெற்று விளங்கியது போல் இருந்தது. வஸந்த காலத்தின் உற்சாகத்தினால், சாலையின் பக்கத்தில் மேய்ந்து கொண்டிருந்த மாடுகளும் கன்றுக் குட்டிகளும் துள்ளி விளையாடின. அதைப் பார்த்த சாருவுக்கும் துள்ளிக் குதித்து ஓட வேண்டுமென்று தோன்றியது.

அப்புறம் பங்களாக்கள் வந்தன. பங்களாக்களின் தோட்டங்களில் புஷ்பச் செடிகள் அபரிமிதமாகப் புஷ்பித்திருந்தன. ஒரு நாகலிங்க மரம் ஏராளமாகப் பூக்கள் பூத்துக் குலுங்கிற்று. அதிலிருந்து வந்த வாஸனை நெடுந்தூரம் பரவிற்று.

வழியெங்கும் விதவிதமான வர்ண இறகுகள் உள்ள பட்டுப் பூச்சிகள் பறந்து கொண்டிருந்தன. அந்தப் பட்டுப் பூச்சிகளைப் பார்க்கப் பார்க்க, சாருவின் உற்சாகம் பன் மடங்கு பெருகிற்று. கையிலிருந்த புத்தகப் பையைச் சாலை ஓரத்திலிருந்த மதிலின்மேல் வைத்துவிட்டு, சாரு அந்தப் பட்டுப் பூச்சிகளைப் போல் தானும் இரண்டு கைகளையும் ஆட்டிக்கொண்டு பறக்க முயன்றாள். கூட வந்த குழந்தைகள், "இதென்னடி சாரு, இங்கேயே ஆரம்பிச்சுட்டே! பள்ளிக்கூடம் போய் ஆடலாம் வா!" என்று சொல்லி, அவளைக் கையைப் பிடித்து இழுத்து அழைத்துக் கொண்டு போனார்கள்.

சாரு பள்ளிக்கூடத்துக்குள் நுழைந்தாளோ இல்லையோ மற்றச் சிறுவர்களும் சிறுமிகளும் அவளைச் சூழ்ந்து கொண்டார்கள். "சாரு! ஒரு டான்ஸ் பண்ணு!" என்று தலைக்குத் தலை கேட்டார்கள். "தெருவில் வாராளோ!", "இல்லை இல்லை; கிருஷ்ணா நீ பேகனே" என்று இம்மாதிரி கூச்சலிட்டார்கள்.

இதற்குள் சாருவின் உபாத்தியாயினி ஜனகம்மாள் அங்கு வந்தாள். "இதென்ன கூச்சல்? மணி அடிக்கப் போறது! எல்லாரும் அவாவா க்ளாஸுக்குப் போங்க!" என்றாள்.

குழந்தைகள், "டீச்சர்! டீச்சர்! சாரு ஒரு டான்ஸ் பண்ணட்டும், டீச்சர்! நீங்க பாடுங்கோ, டீச்சர்!" என்று கூச்சலிட்டார்கள்.

"சரி, ஒரே ஒரு பாட்டுப் பாடறேன். அப்புறம் அவாவா க்ளாஸுக்கு உடனே போயிடணும்" என்று ஜனகம்மாள் சொன்னாள்.

ஜனகம்மாளுக்குச் சங்கீதம், நாட்டியம் முதலிய கலைகளில் விசேஷ ஆர்வம் உண்டு. சங்கீதத்தில் கொஞ்சம் பயிற்சி இருந்தது. நாட்டியம் நிறையப் பார்த்திருந்தாள். குழந்தைகளையும் மேற்சொன்ன கலைகளில் பயிற்றுவித்து வந்தாள்.

வருஷந்தோறும் பள்ளிக்கூடத்துச் சிறுமிகளைக் கொண்டு கதம்பக் கச்சேரி ஒன்று அந்தப் பள்ளிக்கூடத்தில் நடத்துவது உண்டு. இதற்குக் குழந்தைகளைத் தயாரிப்பவள், ஜனகம்மாள்தான். இந்த வருஷத்தில் அவர்களுடைய பள்ளிக்கூடத்தின் கட்டட நிதிக்குப் பணம் சேகரிப்பதற்காக ஒரு நாடகம் நடத்தலாமென்று தீர்மானித்திருந்தார்கள். இதற்காகக் குழந்தைகளைப் பொறுக்கி எடுத்தபோது, சாருவுக்கு நாட்டியம் ரொம்ப நன்றாய் வருமென்பதை ஜனகம்மாள் கண்டு பிடித்தாள். ஏற்கெனவே, சாருவின் பேரில் அவளுக்கு ரொம்பப் பிரியம். இப்பொழுதோ கேட்க வேண்டியதில்லை. இந்த வருஷத்து நாடகத்தில், சாருதான் பள்ளிக்கூடத்துக்கே பெயர் வாங்கிக் கொடுக்கப் போகிறாள் என்று அவள் நம்பியிருந்தாள். ஆகவே, வகுப்பின் மற்றப் பாடங்களையெல்லாங் கூட அலட்சியம் செய்து, சாருவுக்கு நாட்டியம் சொல்லிக் கொடுப்பதில் ஊக்கம் கொண்டிருந்தாள்.

(தொடரும்)

"உன்கூட சைக்கிளில் சுத்திக்கிட்டு இருந்த பெண்ணைப் பார்க்க முடியறதில்லையே?"

"எதிர் வீட்டுக்காரன் 'மோட்டார் பைக்' வாங்கித் தொலைச்சுட்டான்!"

- கி. சிவா.





# மசால்தோசைக்கு ஒரு மணிக்கொடி!

பொள்ளாச்சி நசனின் இயற்பெயர் நடேசன். யாரும் தன்னை 'டே' போடக் கூடாதென்பதால் நசன் ஆக்கிக் கொண்டதாகச் சொல்கிறார்!

தமிழில் இதுவரை வெளிவந்த, வந்து கொண்டிருக்கிற அத்தனை (சுமார் 1,600) சிறு பத்திரிகைகளையும் தேடிச் சேகரித்து வைத்திருக்கிறார். இன்னும் தேடி வருகிறார்.

நசனிடம் 1901 ஆம் வருஷத்தில் வெளிவந்த 'விவேக போதினி' என்கிற இதழின் காப்பி இருக்கிறதென்றால் - நம்ப முடிகிறதா? ஒரு பிரதி கிடைத்து விட்டால் அத்தோடு விட்டு விடுவதில்லை இவர். அதன் முதல் இதழிலிருந்து, கடைசி இதழ் வரைக்கும் தேடிக் கண்டு பிடித்து, என்ன விலை கொடுத்தேனும் வாங்கி, படித்து பைண்ட் பண்ணி வைத்து விடுகிறார். இந்த வகையில் தனது நேரம், உழைப்பு, பணம் அனைத்தையும் சிற்றிதழ் சேகரிப்புக்காகச் செலவிட்டு வருகிறார். இதிலென்ன பெருமை என்று கேட்பவர்களுக்கு நசன் சொல்லும் பதில் : 'சிற்றிதழ் சேகரிப்பது, வரலாறு காட்டவே; தற்பெருமைக்கல்ல!'

தெரிந்தவர்களுக்கும் தெரியாதவர்களுக்கும் கடிதம் எழுதியபடி இருக்கிறார். ஏதாவது பழைய இதழ்கள் இருக்கிறதா என்று கேட்டு. இவர் தொல்லை தாங்காமல் தற்போது பலர் தாமாகவே இதழ் அனுப்ப ஆரம்பித்து விட்டார்கள்!

யாராவது எழுத்தாளர் நண்பர்கள் இவரைப் பார்க்க வந்தால், உடனடியாக ஹோட்டலுக்குக் கூட்டிப் போய் விடுவார்.

"என்ன சாப்பிடறீங்க?"

"மசால் தோசை."

"நீங்க எனக்கொரு 'மணிக்கொடி' தர்றதானா நான் மசால் தோசை ஆர்டர் பண்ணறேன்."

"சரி!"

"வேறென்ன சாப்பிடறீங்க?"

"பரோட்டா."

"ஒரு காலச்சுவடு தர்றதானா பரோட்டா!"

- அன்பான நிபந்தனைகள்!

மிக எளிய வீடு. இருட்டாக ஓர் அறை. அறை நிறைய இதழ்கள். தேதி வாரியாக, ஆண்டுவாரியாக, ஆசிரியர் வாரியாக! இது மாதிரி அரிய இதழ்களில் வெளிவந்துள்ள சிறந்த படைப்புக்களைத் தற்கால வாசகர்களுக்கும் அறிமுகப்படுத்தும் பொருட்டு 'சிற்றிதழ் செய்தி' என்றொரு மாத இதழ் வேறு நடத்துகிறார்! தற்சமயம் வெளிவரும் சிற்றிதழ்களின் சிறந்த படைப்புகளுக்கு அவ்வப்போது பரிசுகள் வேறு கொடுத்து ஊக்குவிக்கிறார்!

நசன், தனது சேமிப்பான சிற்றிதழ் தொகுதிகளை யாருக்கும் இரவல் தருவது கிடையாது. ('திரும்பி வராதுங்க') யாராவது ஆய்வு செய்யத் தயாரெனில், இவர் உதவத்தயார்!

அல்ஹிதாயா, கிராஸ் ரோடு, இரவிலார் குரல், வேதாந்ததீபிகை (இதில் ஒரு வரி கூடப் படிக்க முடியாது - தமிழ்!) ஏன், குலாலமித்திரன், நிகழ், ஃ, இவையெல்லாம் நசன் சேகரிப்பில், நம்கண்ணில் பட்ட சில இதழ்களின் பெயர்கள்.

அப்புறம் ஒரு விஷயம் - தமது இப்பணிக்கு எவ்வித இடையூறும் யாராலும் வரக்கூடாதென்ற முன் ஜாக்கிரதையில் நசன் திருமணமே செய்து கொள்ளவில்லை!

- கிச்சா

தகவல் அளித்த வாசகர்கள் :
உலகநாதன், எஸ்.பி. மாணிக்கவாசகம்



சினிமாப் பாட்டுக்களில் இடம் பெறும் அளவுக்குப் புகழ் வாய்ந்தது பொள்ளாச்சி சந்தை. தென்னிந்தியாவிலேயே மிகப் பெரிய சந்தை. சுற்றிலும் ஒரு நடை போய் வந்தால் ஒரு மணி கரைந்துவிடும். அத்தனை பெரிசு!

அப்பா, அம்மாவைத் தவிர எதுவும் இங்கு கிடைக்கும் என்று உள்ளூரில் பழமொழி சொல்கிறார்கள். உண்மையே. பொள்ளாச்சி பொருளாதாரத்தின் ஆணிவேரே இங்குதான் இருக்கிறது.

வால்பாறை போன்ற இடங்களில் விரவிக் கிடக்கும் காப்பி, டீ, எஸ்டேட்டுகளையே பெருமளவு நம்பி இயங்குகிறது இச் சந்தை. அங்கு பணி புரியும் மக்களின் தேவைகள், வாரம்

# பொள்ளாச்சி சந்தையிலே...

ஒருமுறை (வியாழன்) கூடும் இச்சந்தையில் நிறைவேற்றப்படுகின்றன. தவிர பொள்ளாச்சி - சுற்றுப்புறப் பகுதிகளில் விளைவன, கிடைப்பன யாவும் இச்சந்தையின் மூலமே கேரளாவுக்கும், கடல் கடந்தும் அனுப்பப்படுகின்றன.

சந்தையின் ஏராள வாணிபங்களில் மாடு வியாபாரம் மிகப் பிரதானம். கண்ணுக்கெட்டிய தூரம் வரை ஆயிரக்கணக்கான மாடுகள் வாங்கி, விற்கப்படும் அழகை நாளெல்லாம் பார்க்கலாம். மாடுகள் இங்கே பொதுவாக நான்கு விதமாகப் பிரித்து விற்கப்படுகின்றன.

1. உழவுமாடு
2. வண்டிமாடு
3. பசுக்கள், எருமைகள் (பால்)
4. அடிமாடு.

பசுக்கள், எருமைகள் ஒரு நாளைக்கு 6



● காய்கறிகள்....

* கல்லடை வியாபாரம்....

அல்லது 7 லிட்டர் பால் கறப்பவை. குறைந்தபட்ச விலை ரூ. 5000! வண்டி மாடுகள், உழவுமாடு களெல்லாம் அதன தன் வயது, திறமை அடிப்படையில் ஏழா யிரம் ரூபாயிலிருந்து விலை பேசப்படுகின் றன. மாடுகளின் வய தைத் தெரிந்து கொள்ள, பல்லைப் பார்க்கிறார்கள்.



* கேரளாவுக்குச் செல்லும் அடி மாடுகள்

சிறு பல் எனில் இளமை. அகலமான, வரண்ட பற்களெனில் தாத்தா! மேலும் முன் பற்கள் நான்கு, ஆறு, எட்டு என்று மடிந்து, இணைந் திருந்தால் ஓரம் கட்டி விடுகி றார்கள்! ஆயினும் வியாபா ரம் ஆகாமலில்லை. கிடைத்த விலைக்குத் தள்ளி விடுகிறார்கள் அதையும்.

கடைசியாக அடிமாடு கள். எதற்கும் உபயோக மற்ற, பால் வற்றின மாடு கள் மாமிசத்திற்காக இக்

* மலைபோலத் தேங்காய்!





* மாட்டுக்கு செம்பு சூடுகிறார்கள்.

லிருந்து கேரளாவுக்கு அனுப்பப்படு கின்றன. இரண்டு, இரண்டு மாடு களாய், கழுத்துக் கயிறு இணைக்கப் பட்டு, முதுகில் சிவப்பு மையினால் எண் இடப்பட்டு, 'தேமே' என்று பாலக்காடு - திருச்சூர் ரோட்டில் இவை நடைபோடுவது பரிதாபக் காட்சி. இந்த மாடுகளின் விலை - அவற்றின் மாமிச எடையைப் பொறுத்தது. குறைந்தது ரூ. 3000/-.

மற்றபடி அப்பளக்கடைகள், மீன் சந்தை, காய்கறிக் கடைகள், மளிகை, இரும்பு சாமான்கள், உழவுப் பொருட்கள், கலர் குங்குமம், ரிப்பன், தேங்காய் என்று வியாழன்களில் ஜகஜ்ஜோதியாய் மின்னுகிறது சந்தை.

முன்பு இன்னும் பெரிதாக இருந்ததாம். சாலையோரக் கடைகள், பெட்டிக்கடைகள் ஆங்காங்கே வளர்ந்து விட்டதால், சந்தை குறைந்து விட்டதாகச் சொல்கிறார்கள்.

அதுசரி, ஒரு நாளைக்கு இச்சந் தையின் மொத்த வியாபாரம் எவ்வ ளவு இருக்கும் என்று நினைக்கி றீர்கள்?

காதைக் கொடுங்கள்.
சுமார் 12 முதல் 15 லட்சங்கள்!

- ராஜன்
வாசகர் தகவல் :
ஜெ. மதுராந்தகன்,
ஜி. கௌசல்யாதேவி,
கு. வைகுண்டராமன்



"அண்ணாச்சி! உங்களோட திரு மணச் செய்தியை ரசிகர்களுக்கு என்ன சொல்ல விரும்புறீங்க?"

"கல்யாணத்திற்கு வந்துட்டு, யாரும் 'மொய்' எழுதாமப் போயிடா தீங்கன்னுதான்!"

- செங்குன்றம் ரமேஷ்ராம்



"உ. ஜூலை கம்பெனிக்காரங்க நீலச் சொட்டு நீலக்காரங்களுக்குக் கடிதம் எப்படி எழுதுவாங்க சொல்லு?"

"நீலம், நீலாதிய ஆவல்!"

- எஸ். எஸ். பூங்கதிர்



"சார்! பதிவு பண்ணி ரொம்ப வரு ஷம் ஆகுது. இதுவரை ஒரு இண்டர்வியூ கூட வரலை..."

"எந்த வருஷம் பதிவு பண்ணி னீங்க?"

"கி. பி. 1976 இல் சார்."

"கி. பி. யிலே பதிவு பண்ணினவங்க அந்த கவுண்டரில் விசாரியுங்க. இது கி. மு. யிலே பதிவு பண்ணினவங்களுக்கு மட்டும்தான்."

- சரவணன்

# சுஜாதா

# 4

*இனிய மணி ஓசைகளே*
*மறுபடியும் மெல்ல ஒலியுங்கள்*
*சொர்க்கத்தினுள்*
*இவ்வளவு விரைவாக நுழைய முடியவில்லை எனக்கு.*
*மூச்சுத் திணறுகிறது!*

*- எமிலி டிக்கின்ஸன்*

ஐஸ்க்ரீம் சாப்பிட்டதில் எனக்குத் தொண்டை கட்டிக் கொண்டு, கல்யாணம் பத்தாம் தேதி என்றால், ஒன்பதாம் தேதி எனக்கு நல்ல ஜுரம் வந்து, க்ரோஸின், ஆண்ட்டி பயாட்டிக் என்று நிறைய மாத்திரைகளை விழுங்க வேண்டியிருந்தது.

இருந்தும் கல்யாணத்தின் போது, எனக்குக் கொஞ்சம் அசதியும் லேசான மயக்கமும் இருந்தது. பீரியட் வேறு நாளாகி விட்டதால் ஒவிரால் போட்டுக் கொள்ள வேண்டியிருந்தது. அதனால் அலுப்பு. ஆனால் மிகுந்த மனோபலத்துடன் அந்த தினங்களில் தக்கபடி சிரித்துக் கொண்டிருந்தேன்.

டில்லியில், சென்னையில் போலக் கல்யாண மண்டபங்கள் அதிகம் இல்லை. கித்வாய் நகரில் எங்கள் ப்ளாக்கின் நடுவில் இருந்த பார்க்கிலேயே ஷாமியானா போட்டு, பூந்தொட்டிகள், கையலம்பக் குழாய்த் தொட்டிகள், கண்ணாடி எல்லாம் ஓவர்நைட் மயன் மாளிகை போல அமைத்து விட்டார்கள்.

உட்கார நாற்காலிகள் லாரியில் வந்து இறங்கின. ஆர்க் விளக்குகளும் வீடியோக்காரர்களும் தக்க சமயத்துக்கு வந்தார்கள். புரோகிதர் கைனெட்டிக் ஹோண்டாவில் வந்தார். காலை முகூர்த்தம். செங்கலை வைத்து அடுக்கின தீ வளர்த்து, அர்ஜுன் கண்ணுக்கு மை இட்டுக் கொண்டு என்னை அடிக்கடி பார்த்துச் சிரித்துக் கொண்டே இருந்தார்.

எனக்கு லட்சுமிபாய் நகர் போய் ஒரு இடத்தில் கையெல்லாம் மெஹந்தியும், ஐ. என். ஏ. மார்க்கெட்டில் தலையலங்காரமும் பண்ணி விட்டார்கள். திருமணப் புடைவை ஜரி ஜரியாய் சரிகை போட்டுக் குங்குமச் சிவப்பில் இருந்தது.

கசகசவென்று இருந்தது. ஜெயந்தியைக் கட்டிப் பிடிக்க முடியவில்லை. முதன் முதலாகப் பையன்களுடன் சேர்ந்து விளையாடினாள். எல்லோரும் நாற்காலிகளைத் தாறுமாறாகப் போட்டுக் கொண்டு, 'அந்தாக்ஷரி' பாடி விளையாடினார்கள். ஹிந்தியிலும் தமிழிலும் பேசிக் கொண்டார்கள். அப்பாவின் விருந்தினர்கள் அனைவரும் வந்திருந்தார்கள். அந்தமான் கிருஷ்ணன் கூட வந்து விட்டார். மாமா வந்திருந்தார். அம்மா பக்கம் அதிகம் பேர் வரவில்லை. அர்ஜுன் வீட்டினர் இருபத்தைந்து பேர் வந்திருந்தார்கள். எனக்கு வைத்த சீர்வரிசையெல்லாம் மணமேடைக்குப் பக்கத்திலேயே வைத்து வீடியோ எடுத்தார்கள்.

சாயங்காலம் ஜன்பத்திலிருந்த மெரிடியன் ஓட்டலில் அர்ஜுன் ஏற்பாடு செய்திருந்த ரிஸப்ஷனுக்கு எனக்கு ஷிஃபான் புடைவையும் கொண்டையும் போட்டு விட்டார்கள். யார் யாரோ வந்து சிரித்துச்

# வண்ணத்துப்பூச்சி வேட்டை



சிரித்து உதட்டோரத்தில் வலிக்க ஆரம்பித்து விட்டது.

தலைவலி பொறுக்க முடியவில்லை. ஜெயந்தியைக் கூப்பிட்டு எங்கேயாவது போய் அனால்ஜின் வாங்கிக் கொண்டு வா என்று அனுப்பினால், அவள் பாய்ஸ் உடன் விளையாட்டு சுவாரஸ்யத்தில் மறந்து விட்டாள்.



பைன் ஆப்பிள் கேக், சிப்ஸ், சமூசா, ஜிலேபி, ஐஸ்க்ரீம் எல்லாம் வைத்து, 'ஹைடீ' என்று பலகாரங்கள் பாதி வேஸ்டாக வைத்திருந்தார்கள். மேலே இருந்து ஸ்பீக்கரில் சரோடு இசை கேட்டுக் கொண்டிருந்தது. கல்யாணம் என்பதைப் பற்றி வைத்துக் கொண்டிருந்த எதிர்பார்ப்புகள் குழப்பமாக இருந்தாலும், அந்த தினம் இவ்வளவு தலைவலியில் கஷ்டப்படுவேன் என்று எதிர்பார்க்கவே இல்லை. எல்லாம் முடிந்து கழுத்து மாலையைக் கழற்றிய போது அழுகை வந்து கண்ணைத் துடைத்துக் கொண்டதை அம்மா தப்பர்த்தம் பண்ணிக் கொண்டு,

''சரியாப் போய்டும், சரியாப் போய்டும். என் கல்யாணம் திருத்துறைப் பூண்டியில்...'' என்று ஆரம்பித்தாள்.

அர்ஜுன் அதே ஓட்டலில் ப்ரைடல் ஸ்வீட் ஏற்பாடு பண்ணியிருந்தார். மறுநாள் க்ஷேத்திராடனம் போல பெங்களூர், ஊட்டி, கொடைக்கானல், கோவளம் என்று ஹனிமூன் ட்ரிப் போட்டு, எல்லா இடங்களிலும் ஓட்டல் ரிசர்வேஷன் - அம்பி என்று ஒருத்தர், என்ன உறவு என்று சரியாகத் தெரியவில்லை - ஏற்பாடு செய்திருந்தார்.

மறுநாள் அதிகாலை ஃப்ளைட்டில் பெங்களூர் புறப்படுகிறோம். பதினைந்து தினம் சுற்றியடித்து விட்டு மீண்டும் டில்லி வந்து ஆஷாட மாதம் கழிந்ததும் குடித்தனம் வைப்பதாக ஏற்பாடு. இனி என் பேச்சும் பழக்கமும் என்னுடையதில்லை. யாரோ தீர்மானிக்கிறார்கள் என்கிற உணர்வு வந்தது.

முதல் இரவு பற்றிய சம்பிரதாய எண்ணங்கள் தான் எனக்கு உண்டு. சினிமாவில் போல பால் பழம், பளிச்சிடும் வெள்ளிச் செம்பு இப்படி இல்லாமல் நான்

பாட்டுக்குப் புத்தகம் படித்துக் கொண்டிருந்தேன். அர்ஜுன் வந்தார். டீவி மௌனமாக ஓடிக் கொண்டிருக்க, அவர் தன் பூட்ஸ், டை இவைகளையெல்லாம் கழற்றி, பைஜாமாவுக்கு மாற்றிக் கொண்டார்.

தலைமயிர் கலைந்து நெற்றியில் அவசரக் குங்குமத் தீற்று. அதை என் நெற்றியில் ஒட்ட வைக்க முயன்றார்.

அர்ஜுன் எனக்கு ஒருவிதமான நம்பிக்கையை ஊட்டப் பலவாறு பேசிக் கொண்டிருந்தார். அதுதான் அதிகம். அவ்வப்போது சீண்டிக் கொண்டோம்.

''ஏன் ஒரு மாதிரி இருக்கே?''

''காலைல இருந்து தலைவலி பிளக்கிறது.''

''உனக்கு ரொம்பக் கஷ்டம் கொடுத்துட்டேன்.''

''தலைவலி அப்ப தெரியலை.''

''கொஞ்ச நேரம் தூங்கு. அப்புறம் எழுப்புகிறேன்.''

இருவரும் கொஞ்ச நேரம் கன்னாபின்னா டீவி பார்த்து விட்டு தூங்கிப் போனோம்.

ஒரு நாளைக்கு அதிக சம்பவங்கள். அதிகாலை எழுந்தது, தாலி கட்டினது, மணமேடையில் பலர் கைகுலுக்கியது, பேருக்குப் பேர் புடைவை கட்டி விட்டது, ஒரே இலையில் சாப்பிட்டது. ஒருகணம் கூட ரெஸ்ட் இல்லாமல் ஜ.என்.ஏ மார்க்கெட்டுக்கும் லட்கமிபாய் நகருக்கும் அலைந்தது, வேண்டாத கொண்டை போட்ட தலையலங்காரத்தின் போது அந்த பஞ்சாபி பெண்ணின் வியர்வை நெடி. சாயங்கால ரிஸப்ஷனில் நிமிஷத்துக்கு மூன்று முறை சிரித்தது. நான் பூரா ஆதார கருநி போல இந்தத் தலைவலி, இப்போது விண்விண் என்று என்னை முழுசாக கவனிக்கும் நேரம் வந்தாச்சு என்று வெடிக்கத் துவங்க -

கொஞ்ச நேரம்தான். தூங்கி எழுந்த போது பக்கத்துப் படுக்கையில் அர்ஜுனைத் தொட்டுப் பார்த்து எல்லாம் நிஜம்தான் என்று ஊர்ஜிதம் செய்து கொள்ள, தொட்டுப் பார்த்துக் கொண்டேன். படுக்கை காலியாக இருந்தது. பாத்ரூம் போயிருக்கிறாரோ என்று பார்த்தேன். கொஞ்ச நேரத்தில் வெளிக் கதவின் சாவி திறக்கும் சப்தம் கேட்டது.

''நீ இன்னும் தூங்கலையா? ஏதாவது ட்ராங்க்விலைஸர் தரட்டுமா? எனக்கும் தூக்கமில்லை. லோபில போய் ஒரு போன் கால் பண்ணிட்டு வந்தேன்'' என்றார்.

மறுநாள் காலையில் நாங்கள் பெங்களூர் போக ப்ளேன் பிடித்தோம். எங்கள் ஹனிமூன் புனிதப் பயணம் துவங்கியது. ஏர்பஸ் விமானத்தில் நான் போனதே இல்லை. எதற்குப் பொய் சொல்வானேன். ''விமானத்திலேயே நான் போனதில்லை!'' என்றேன்.

''நகர்றதே தெரியாது'' என்றார். அலுமினிய தள்ளுவண்டிகளும் மொசைக் தரையில் சறுக்கி விளையாடும் பணக்காரக் குழந்தைகளும் எங்கும் சீருடை ஆசாமிகளும் எல்லாரும் எல்லா திசையிலும் நடக்க என்னை வழியனுப்ப அப்பா, அம்மா, ஜெயந்தி மற்றும் சில அத்தைகளும் சித்தப்பாக்களும் வந்திருந்தார்கள். சன்னலுக்கு வெளியிலிருந்து டாட்டா காட்டிய போது அம்மா, ''நான் சொன்னதெல்லாம் ஞாபகம் வெச்சுக்கோ!'' என்றாள்.

என்ன சொன்னாள் என்று குழப்பமாக இருந்தது. சமீப காலத்தில் அம்மா ஏதும் சொல்லவில்லை. பிறந்ததிலிருந்து அவ்வப்போது 'அதைச் செய்யாதே இதைச் செய்யாதே' என்று எச்சரிக்கைகளாகவே, தடையுத்தரவுகளாகவே வளர்த்தாளே, அந்த அறிவுரைகளைக் குறிப்பிடுகிறாள் போலும்!

நான், ''கவலைப்படாதம்மா, சமத்தா இருக்கிறேன்'' என்றேன்.

அப்பா ஏர்போர்ட் புக் ஸ்டாலில் புத்தகம் வாங்க உள்ளே அனுமதிக்க மாட்டேன் என்கிறார்கள் என்று வருத்தப்பட்டார். ''செக்யூரிட்டிக்காக'' என்று அர்ஜுன் சொன்னார். எக்ஸ்ரே மிஷினில் என் கைப்பையைச் செலுத்தி, அந்தப் பக்கம் பெற்றுக் கொள்வது, பெண் போலீஸ் என் மார்பை கருவியால் தடவுவது, அந்தப் பக்கம் தூண்களைச் சுற்றி சுகமான இருக்கைகள், எல்லாமே புதுசாக இருந்தன எனக்கு.

கையில் வரைந்திருந்த மெஹந்தியும் கலகலக்கும் வளையல்களும் எங்கள் ஹனிமூன் நோக்கத்தைப் பகிரங்கமாக அறிவித்தன. எனக்கு வெட்கமாக இருந்தது. படிக்கப் புத்தகம் எடுத்து வரவில்லை. அர்ஜுன் ஓயாது பேசிக் கொண்டிருந்தார். டைம் பத்திரிகையுடன் பிஸினஸ் இண்டியாவும் இகனாமிக் டைம்ஸும் வாங்கினார். எனக்காக ஒரு ஃபெமினா வாங்கியிருந்தார்.

ப்ளேன் கிளம்பக் காத்திருக்கும்போது, நான் சில்லி சிக்கன் செய்வது பற்றியும் மெனோபாஸ் ட்ரபிள் பற்றியும் ஒல்லியான மங்கைகளின் கார்டிகன் சிரிப்புக்களையும் சம்பந்தமில்லாமல் படித்துக் கொண்

---

''ராப்பிச்சையா இருந்த நீ, இப்பல்லாம் ஏன் பகல்ல வர ஆரம்பிச்சிட்டே?''

''நாடு ரொம்பக் கெட்டுப் போச்சு தாயி... ராத்திரில வழிப்பறி அதிகமா நடக்க ஆரம்பிச்சிடுச்சி தாயி!''

- சீர்காழி வி. ரேவதி



நீங்கள் பார்க்கிற காந்தி சிலை, பொள்ளாச்சி நகரின் பிரதான நான்கு முனை சந்திப்பு ஒன்றில் இருப்பது. இதில் என்ன விசேஷம் என்றால் பொள்ளாச்சி தமிழ் இசைச் சங்கத்தினரால் நிறுவப்பட்டுள்ள இச்சிலையைத் திறந்து வைத்தது ஓர் அரிஜன சிறுமி. (பெயரை ஏனோ பொறிக்கவில்லை. நாம் விசாரித்தும் கிடைக்கவில்லை.)




# காந்தி அருகே பிராந்தி!

திருஷ்டி வேண்டாமா! அம்புக்குறி தெரிகிறதா? மலிவு விலை மதுக்கடை! காந்தியை நோக்கி!

ம.வி. மதுதான் இப்போது இல்லையே? குழம்புவோருக்கு... புகைப்படம் பழசு. இப்போது ம.வி. மதுக்கடை அங்கு இல்லை. மாறாக செந்தமிழில் - பிராந்திக்கடை!

– பா.ரா.

படம் : கலைச்செல்வன்

---

டிருக்க, அர்ஜுனின் சினேகிதர் ஒருத்தரை சக பயணியாகப் பார்த்து, அவருக்கு என்னை அறிமுகப்படுத்தி வைத்தார்.

''கங்கிராஜுலேஷன்ஸ்! ஷி இஸ் வெரி ப்ரெட்டி. என்னம்மா இவங்கிட்ட இருக்கிற பழக்க தோஷங்களையெல்லாம் சொல்லிட்டானோ இல்லையோ?''

நான் புரியாமல் மையமாகச் சிரித்தேன்.

''ஏய் சங்கர்'' என்று அர்ஜுன் அதட்ட, ''அவ பாட்டுக்கு உண்மைன்னு நினைக்கப் போறா, சங்கர் தமாஷுக்குச் சொல்றான்'' என்றார்.

''சிகரெட் கிகரெட் எல்லாம் ஏதும் கிடையாது. ரொம்பத் தங்கமான பையன். என்ன, அப்ப இப்ப த்ரீஓக்ளாக் ஃபோர் ஓக்ளாக் என்று...''

''ஏய்! ஷட் அப்மேன்!'' என்று அர்ஜுன் அதட்ட, அந்த சங்கர் எனப்பட்டவர் சிரித்து, ''ஸீ யு இன் பெங்களூர்'' என்றார்.

''அ ஹோம் ரெக்கர்'' என்று அவரைப் பார்த்துச் சிரித்து டாட்டா காட்டி, ''அவன் சொல்றதையெல்லாம் நம்பாதே'' என்றார்.

''அவர் என்ன சொன்னார்? புரியவே இல்லையே...''

''புரியலை? நான் ரேஸுக்குப் போவேனாம்?''

''ரேஸ்னா?''

''குதிரை ரேஸ்! எப்பவோ ஒரு தடவை அங்க ஒரு கஸ்டமரைச் சந்திக்கிறதுக்குப் போனேன். அதிலிருந்து பிடிச்சான்'' என்றார். ''எப்ப ஏர்போர்ட்ல பார்த்தாலும் கேட்டுக்கிட்டே இருப்பான்'' என்றார்.

அந்த ஆசாமியை மறுபடி க்யூவில் பார்த்த போது, அர்ஜுன், ''கொஞ்சம் இரு. அந்த போர் போகட்டும். அப்புறம் போகலாம்'' என்றார்.

(தொடரும்)

பொள்ளாச்சியில் ஒரு தொழில் புரட்சி!

# திருப்பூருக்கு சவால் அல்ல, சகா!



* கோபாலகிருஷ்ணன்

* அப்புசாமி

**பொ**ள்ளாச்சியை, தொழில் துறையில் பின்தங்கிய பகுதியாக அறிவித்து, தொழில் வளர்ச்சிக்காகச் சில சலுகைகளையும் மானியங்களையும் ஒதுக்கியுள்ளது அரசு.

இதனைப் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் ஒரு பிரும்மாண்டமான பனியன் தொழிற்பேட்டை உருவாகப் போகிறது. இதுவரை விவசாயம், விவசாயம் மட்டுமே குறிப்பிடும்படியான தொழிலாக இருந்து வரும் இப்பகுதியில் இந்த பனியன் ஆலை உரு வானால் பொள்ளாச்சியின் தோற்றமே மாறிவிட வாய்ப்பு உண்டு - ஒரு பெரும் தொழில் நகரமாக, வர்த்தகக் கேந்திரமாக, அந்நியச் செலாவணியின் பிறப்பிடமாக!

பொள்ளாச்சி தொழில் வர்த்தக சபைத் தலைவர் அப்புசாமி, துணைத் தலைவர் கோபாலகிருஷ்ணன் இருவரும் இத்திட்டம் பற்றி நம்மிடம் பேசினர் :

''இங்கு இனி உருவாகப் போகிற தலைமுறை, தொடர்ந்து விவசாயம் பார்ப்பார்கள் என்று சொல்ல முடியாது. படிப்பறிவு வளர்ந்து விட்டது. அவரவர் இப்போதே வேலைதேடி வெளியூர்களுக்குப் போக ஆரம்பித்து விட்டனர். இங்கிருந்து ஏராளமானோர் திருப்பூர் பனியன் மில்களுக்குப் பணிக்குச் செல்கின்றனர். எனவே, இங்கேயே ஏன் ஒரு தொழிற்பேட்டை உருவாக்கக் கூடாது என்று தோன்றியது. நேரதாக, அரசும் பொள்ளாச்சியை தொழில் துறையில் பின்தங்கிய நகரமாக அறிவித்து சில சலுகைகள் வழங்க முன் வந்துள்ளது. எனவே பனியன் தொழிற் பேட்டைக்கான முதல் கட்டப் பணிகளை விரைவாகத் தொடங்கி விட்டோம்.''

''50 - 60 கிலோ மீட்டருக்குள் திருப்

பூரில்தான் ஏராளமான பனியன் தொழிற்சாலைகள் இருக்கின்றனவே. இங்கும் அதே தொழில் தொடங்கக் காரணம்?''

''திருப்பூரில் இருப்பதனால் இங்கு தொடங்குவதில் எவ்வித பாதிப்பும் இல்லை. தவிர MCU5DCH என்கிற பனியன் தயாரிப்புக்குத் தேவையான உயர் தர, நீண்ட இழைப்பருத்தி பொள்ளாச்சியில் ஏராளமாக விளைகிறது. சொல்லப்போனால் இந்தரகப் பருத்தி, இங்கிருந்துதான் மற்ற இடங்களுக்குப் போகிறது. தண்ணீருக்கும் பஞ்சமில்லை. இங்கே இந்த பனியன்-பின்னலாடைத் தொழில் தொடங்குவது பலவகையிலும் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்று.''

''விவசாய நிலங்கள் நிறைந்த இப்பகுதியில் தொழிற்பேட்டைக்கு தரிசு நிலம் கிடைப்பது சிரமமில்லையா?''

''நிலம் ரெடி. 150 ஏக்கர் நிலம்! பாலக்காடு செல்லும் சாலையில் - அதிகம் விவசாயத்திற்குப் பயன்படாத நிலமாகப் பார்த்துத்தான் வாங்கியிருக்கிறோம். இந்நிலத்தில் முதல் கட்டமாக 300 யூனிட்கள் ஆரம்பிக்கப் படவுள்ளன.''

''தொழில் துறை பெருகுவது ஆரோக்கியமான போக்குத்தானெனினும் விவசாயம் பிரதானமாயுள்ள இப்பகுதியில் இதனால் உழவு பாதிக்கப்படாதா?''

''அதற்கு வாய்ப்பே இல்லை. விவசாயம் பார்ப்பவர்கள் எல்லாரும் முப்பது வயதுக்கு மேற்பட்டவர்களாகத்தான் இருக்கிறார்கள். நாங்கள் தேர்ந்தெடுக்கும் நபர்களோ 30 வயதிற்குள்ளும் படித்தவர்களாகவும் இருப்பார்கள். தவிர, அவர்களுக்கு 20 வாரம் இத்தொழில் குறித்து சிறப்பு வகுப்புகளும் பயிற்சியும் முன்னதாக நடத்தி, தேறுபவர்களையே வேலைக்குச் சேர்ப்போம். இதன் மூலம் இந்தப் பகுதியில் பல ஆயிரம் பேர்களுக்குப் புதிதாக வேலை வாய்ப்பு கிடைக்கவிருக்கிறது.''

''பனியன் தயாரிப்பில் சாயம் தோய்த்தல் ஒரு முக்கியப் பங்கல்லவா? சாய நீர் நிலத்தில் கலந்தால் பயிர்களுக்கு பாதிப்பு ஏற்படுமே?''

''ஆமாம். அதனால் எங்களது முதல் நடவடிக்கையே அதைத் தவிர்ப்பதுதான். சாயநீரை ஜப்பான் தொழில் நுட்ப உதவியுடன் நல்ல நீராக்குகிறோம். அதே நீர் மறுபடி மறுபடி பயன்படுத்தப்படப் போகிறது. ஒரு துளி சாயம் கூட மண்ணுக்குப் போகாது. இதற்காக ரூ. 2 கோடி வரை செலவாகிறது.''

''இத்தனை பெரிய திட்டமாக இதைத் தொடங்குகிறீர்களே, இதனால் திருப்பூர் மார்க்கெட்டுக்கு பாதிப்பு நேர வாய்ப்பு உண்டா?''

''நூறு சதம் இல்லை! இன்றைக்கு பனியன் உற்பத்தி மாதிரி லாபகரமான வேறு தொழில்கள் அதிகம் இல்லை. தமிழ் நாட்டில் டீ-ஷர்ட், பனியன் போடுபவர்கள் குறைவாக இருக்கலாம். ஆனால் எங்கள் மார்க்கெட், உலக அரங்கை நோக்கியுள்ளது. எத்தனை உற்பத்தி செய்தாலும் 'இன்னும்தா, இன்னும் தா!' என்கிறார்கள், மேற்கத்திய நாட்டினர். நேற்று திருப்பூர், இன்று பொள்ளாச்சி, நாளை வேறு எத்தனை பனியன் தொழிற்பேட்டைகள் உருவானாலும் சரி - ஆர்டர்களுக்குப் பஞ்சமே இல்லை!''




''இத்தனை செலவில், தரமாகத் தயாரிக்கப்படும் பனியன்களை ஏன் வெளி நாடுகளுக்கு மட்டுமே அனுப்புகிறீர்கள்?''

''அதுதான் இந்தியா! நமது தயாரிப்பின் மீது அவர்கள் 'பிராண்ட் நேம்' பிரிண்ட் செய்து அனுப்ப, அதை வாங்கிப் போட்டுக் கொண்டு அழகு பார்ப்பார்களே தவிர, நேரடியாக இங்கே தயாரான டீ-ஷர்ட் என்றால் யார் வாங்குவார்கள்? இறக்குமதி கட்டுப்பாடுகள் மூச்சுத் திணறும் அளவில் இருந்ததால்தான் இந்த ஃபாரின் மோகம். இது மனத் தத்துவம். இப்போது சுதந்திர வர்த்தகத்துக்கு வழி வகுக்கப்பட்டு விட்டதால், போகப்போக இந்நிலை மாறும். நமது தயாரிப்புகளை நாமே இங்கு இன்னும் அதிகமாக விற்பனை செய்யும் காலம் விரைவில் வரும்.''

– ஜக்கு.

# இங்கே... இவர்கள்... இப்படி...



* நா. மகாலிங்கம்.

●● ஒரு ஹீரோ எப்படி இருக்க வேண்டும்? பொள்ளாச்சிக்காரர்களைக் கேளுங்கள். சட்டென்று 'நா. மகாலிங்கம் மாதிரி' என்பார்கள். ஒன்-மேன்-ஷோ என்பார்கள். பொள்ளாச்சிக்காரர்கள் கொடுத்து வைத்தவர்கள். பிறந்த மண் என்கிற ஒரே காரணத்திற்காக மகாலிங்கம் இந்தப் பிரதேசத்திற்குச் செய்திருக்கிற உபகாரங்கள் எக்களக்கச்சக்கசக்கம்! ஏதாவது ஸ்கூலுக்குள் நுழைந்தாலோ, கல்லூரிக்குள் நுழைந்தாலோ, நிறுவனங்களிலோ, கலை, இலக்கிய அமைப்புகளிலோ, வர்த்தக சங்கங்களிலோ - அவ்வளவு ஏன் - ஒரு சிறு சந்தில் நுழைந்தாலும் அங்கு ஏதாவதொரு நலப் பணி! நா. மகாலிங்கம்! முதல் தமிழ் மெட்ரிகுலேஷன் பள்ளி, பொள்ளாச்சி தமிழிசைச் சங்கம் இன்னும் பலவற்றுக்கும் ரிஷிமூல புருஷராக இவரே இருக்கிறார். (தமிழிசைச் சங்கம் பற்றி ஒருவரி சொல்ல வேண்டும். 23 வருடங்களாக இந்தப் பகுதியில் கலைச்சேவை புரிந்துவரும் இச் சங்கத்தில் தமிழிசை தவிர, அவ்வப்போது தியாகராஜருக்கும் இடமுண்டு. இசை வகுப்புகளும் நடத்துவதாகச் சொல்கிறார் இதன் செயலர் வெள்ளையப்பன்.) சக்தி சோயா, பஸ் பாடி பில்டிங் என்று தன் பல நிறுவனங்களின் மூலம் உள்ளூரில் ஏராள வேலை வாய்ப்பு அளித்திருக்கிறார். ஊரில், பிறந்த குழந்தைக்கும் இவர் பெயர் தெரிந்திருக்கிறது. உச்சரிப்பில் அபார மரியாதை தொனிக்கிறது. பொள்ளாச்சிக்காரர்கள் நா.ம.வுக்கு ரொம்பவும் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

●● ஃபிலிம் நியூஸ் ஆனந்தன் கேள்விப்பட்டிருப்பீர்கள். ஸ்போர்ட்ஸ் நியூஸ் சங்கரன்? பொள்ளாச்சியில் இருக்கிறார். ரிடையர்டு பி.டி. மாஸ்டர். அறுபது வயதிலும் ஆஜானுபாகுவான தோற்றம். அசாத்ய உற்சாகம். என்றும் மாறா இளமை. விளையாட்டுத் துறை சம்பந்தமான சகலமான தகவல்களும், படங்களும் ஆண்டு, தேதி, இடம் வாரியாக வரிசைப்படுத்தி சேகரித்து வைத்திருக்கிறார். மலை மாதிரி பைண்ட் வால்யூம்கள். அத்தனையும் தகவல் சுரங்கங்கள். முதல் ஒலிம்பிக், முதல் ஏசியன் கேம்ஸ், முதல் கிரிக்கெட், முதல் ஃபுட்பால் என்று அநேக முதல்களில் ஆரம்பித்து, நமது மோகன் பகான், ஸ்டேட் பாங்க் அணி, புச்சிபாபு வரை மனிதர் ஒன்று விடவில்லை. (கோலி, கில்லிதான் பாக்கி.) பள்ளி, கல்லூரி மாணவர்களுக்கு வெறும்



* வெங்கடாச்சாரி



விளையாட்டைச் சொல்லித் தராமல், அதன் வரலாற்றையும் போதிக்க வேண்டும் என்கிறார். விளையாட்டுத் துறையில் சிறப்பாக முன்னேறும் மாணவர்கள் படிப்பில் கொஞ்சம் மந்தமாக இருந்தால், அதைப் பொருட்படுத்தாமல் பரீட்சைகளில் 'தூக்கிப் போட்டு' விட வேண்டும் என்கிறார். இந்திய, உலக விளையாட்டுகள், வீரர்கள், வீராங்கனைகள் சகலரின் ஜாதகங்களும் இவரிடம் இருக்கிறது. யாரும் தன்னைச் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளாத வருத்தம் பேச்சின் அடிநாதமாகத் தெரிந்தது.



●சங்கரன்

●● பொள்ளாச்சியில் 'விநாயகர் கலை மன்றம்' காந்தி என்று சொல்லிப் பாருங்கள். சட்டென்று ஊரே இனம் கண்டு கொள்ளும். சந்திரசேகரன் இவர் இயற்பெயர். காந்தி என்ற பெயர் புனைந்தவர்கள் ஊர் மக்கள். இன்று அதுவே நிலைத்து, ஒரிஜினல் பெயரே யாவருக்கும் மறந்து விட்டது. காந்தியின் 'விநாயகர் கலை மன்றம்' ஒரு நபர் கமிஷன் மாதிரி. அமைப்பாளர், நிறுவனர், செயலர், பொருளர், சகலரும் அவரே. தினந்தோறும் பொள்ளாச்சி முழுக்க காலார நடந்து, வீடு வீடாக ஏறி, ஒரு ரூபாய் கலெக்ட் பண்ணி மாதம் தோறும் கச்சேரி, பட்டி மன்றம் என்றெல்லாம் கலைப்பணி புரிகிறார்.

ஆரம்பத்தில் மக்கள் இந்த ஒரு ரூபாயைத் தவறாது தருவதற்கே மூக்கால் அழுதாலும் போகப் போக பழகி, காந்தி வரும் நாளை ஆவலோடு எதிர் பார்க்க ஆரம்பித்து விட்டனர். காந்தியின் இக்கலைப் பணிக்கு வயது முப்பது. வாரியாரிலிருந்து, கீரன் வரை சகல ஆன்மிக சொற்பொழிவாளர்களும் இவரது ஏற்பாட்டில், நிகழ்ச்சி நடத்தியிருக்கின்றனர். இசையைப் பொறுத்த வரை, இன்னும் எம்.எஸ். மட்டும்தான் பாக்கி!

●● 'படித்து விட்டீர்களா? அமரர் கல்கி எழுதிய தியாகபூமி - தற்போது கல்கியில் தொடராக வெளிவருகிறது. தவற விடாதீர்கள்!' - பிட் நோட்டீஸ் அடித்து விநியோகித்து வருபவர் சிவசாமி! பொள்ளாச்சியில் சிவமணி பிரிண்டர்ஸ் என்று அச்சுக் கூடம் வைத்திருக்கிறார். ஆர்டர் கிடைத்தால் வேலை என்றில்லாமல் தாமே, கைக்காசைச் செலவழித்து பாரதியாரின் பாடல்கள், மகான்களின் மணிமொழிகள் என்றெல்லாம் அச்சடித்து, இலவசமாக விநியோகித்து வருகிறார். தவறாமல் ஒவ்வொரு நோட்டீஸின் பின்புறமும் 'படித்து விட்டீர்களா? இவ்வாரக் கல்கி...' அமரர் கல்கியின்பால் கொண்ட ஈடுபாடும், கல்கி இதழின் மேல் கொண்ட மதிப்புமே இதற்குக் காரணம் என்கிறார் இவர்!

●● 'எம்ஜியாருடன் நடித்த ஒரு அந்தக்கால நடிகரை நீங்கள் பார்க்க வேண்டுமா?' என்று கேட்டு, நண்பர் இழுத்துப் போனார். பொள்ளாச்சி கோட்டூர் ரோட்டில் ஒரு சிறு குடிலில் அந்தப் பெரியவரைச்



✱ சிவசாமி



✱ மாணிக்கவாசகம்



✱ சாரி

சந்தித்தோம். பெயர் : மாணிக்கவாசகம். கதாசிரியர், வசனகர்த்தா, நாடக ஆசிரியர், நடிகர், பத்திரிகை ஆசிரியர் (பொள்ளாச்சி செய்திச்சரம்) என்று பல அவதாரங்கள் நடத்தி முடித்து, களைத்து ஓய்ந்திருக்கிறார். சிறிய வயதிலிருந்தே தொடங்கிய கலை யார்வம் காரணமாக நாடகம், சினிமா என்று தன் கவனத்தைச் செலுத்த ஆரம்பித்தவர் - ஏராளமான ரேடியோ, மேடை நாடகங்களை எழுதி, இயக்கி நடித்திருக்கிறார். கோவையில் முன்பு சென்ட்ரல் ஸ்டூடியோ இயங்கிக் கொண்டிருந்த போது சிலபல சினிமாக்களிலும் இவர் நடித்திருக்கிறார். குறிப்பாக எம்ஜியாரின் ஆரம்பகாலப் படங்கள். நண்பனாக, பக்கத்து வீட்டுக்காரராக, பால் காரராக... போட்டோவைப் பார்த்துக் கொள்ளுங்கள். ஏதாவது எம்ஜிஆர் படம் டீ.வியில் காட்டினால் மறக்காது கூர்ந்து கவனியுங்கள், எங்காவது மாணிக்கவாசகம் தெரிகிறாரா என்று!

●● 'சாரி' என்கிற பெயரில் ஆரம்ப காலக் கல்கியிலும் விகடனிலும் கார்ட்டூன்கள் பார்த்திருக்கலாம். வெங்கடாச்சாரி. பொள்ளாச்சியில் வாழும் மூத்த குடிமகன்களுள் ஒருவர். கார்ட்டூன் போடும் அதே கையால் சிற்பங்களை ஓவியங்களாய் வரைகிறார். போட்டோ எடுக்கிறார். இந்தியன் எக்ஸ்பிரஸில் கோவில்கள், செப் பேடுகள், கல் வெட்டுகள் பற்றியெல்லாம் கட்டுரைகள் எழுதுகிறார். இத்தனை கலை வித்தகரான இவர், அடிப்படையில் ஒரு ஆங்கிலப் பேராசிரியர். ஓய்வுபெற்ற கல்வி அதிகாரி. இவரது அம்மன் வரைபடங்கள் மிகப் பிரசித்தம். கோவில்களுக்குச் சென்று, அனுமதி பெற்று, மூலஸ்தானத்தில் அமர்ந்துள்ள இறைவன் திரு உருவை தத்ரூபமாகப் பார்த்து வரைந்து பெயின்ட் பண்ணுகிறார். இதற்கான சிரமம், நேரம், செலவு மிக அதிகம் எனினும் வருவாய் மிகக் குறைவு. 'பணத்திற்காக நான் செய்வதில்லை. இதை முடித்ததும் கிடைக்கிற திருப்தி இருக்கிறதே....' என்று சிலாகிக்கிறார் சாரி. முன்பெல்லாம் ஜோக் எழுதி கார்ட்டூன் படமும் போட்டு வந்த இவர், தற்போது தமக்கு ஜோக் எதுவும் தோன்றுவதே இல்லை என்று மிக வருத்தத்துடன் குறிப்பிடுகிறார். தனது முதல் ஜோக் 'கல்கி'யில் (1950 களில்) வெளிவந்ததை மிகவும் மகிழ்ச்சியுடன் நம்மிடம் தெரிவிக்கிறார்!

– நியூஸ் மேன்.

தகவல் : வி. சுந்தர்ராஜன், ஆர். திருமுருகன், எஸ். சுபத்திரா, பொன்ராஜ்குமார், கி. ரவீந்திரன்.

---

*கல்கி, ஜன. 9 இதழில், தராசுவைக் கலங்கடித்த விஷயம் என்று சிகரெட் விளம்பரங்கள் தூர்தர்ஷனில் அனுமதிக்கப்படுவதைக் குறிப்பிட்டிருக்கிறார். சமீபத்தில் என் நண்பனின் பேரனுடைய பிறந்த தின விழாவில் கலந்து கொள்ளச் சென்றிருந் தேன். சிறுவர் சிறுமியர் டீ.வி. விளம்பரங்களைப் பேசி, ஆடி, நடித்துக் காண்பித்தனர். ஒரு காட்சி : ஒரு பையன் கடைக்காரன் போன்று உட்கார்ந்திருந்தான். மற்றொரு பையன் கடைக்கு வந்து தயங்குவது போன்று நடித்தான். அப்பொழுது வேறொரு பையன் வேகமாக வந்து ''மூட்ஸ் ப்ளீஸ்'' என்று தயங்காமல் கேட்டு வாங்கிச் செல்வது போல் நடித்தான். அதுவரை சிரித்து மகிழ்ந்து கொண்டிருந்த எல்லோரும், கூச்சத்தினால் தலை குனிந்தனர். பொழுது போக்குச் சாதனமென்ற பெயரில் தொலைக்காட்சி இன்று சமூகச் சீரழிவில் பெரும்பங்கு வகித்து வருவது கண்கூடு.*

– எஸ். கிருஷ்ணன்.



# பௌர்ணமிக்குக் காத்திருக்கும் அலைகள்!

'வானம்பாடி' கவிதை இயக்கத்தில் உருவான கவிஞர்களுள் குறிப்பிடத்தகுந்தவர் சிற்பி. பொள்ளாச்சிக்காரர். கல்லூரிப் பேராசிரியர். தமது 'சர்ப்பயாகம்' தொகுதி மூலம் பரவலான கவனம் பெற்றவர். குழந்தைகளுக்கும் எழுதுவது இவரது தனிச்சிறப்பு.



* சிற்பி

*
சிற்பம் சமைக்கத் திரட்டிய
மண்ணில்
மற்றொரு சிற்பம்
துளிர்க்கும் பசும்புல்!

*
தூக்கணாங் குருவியே
தோற்றேன்; இன்னும்
'லோன்' கிட்டவில்லை எனக்கு!

*
மரநிழல் எங்கும் வெயில் தங்கம்
பிச்சைக்காரன் கனவு கலையத்
தகரக் குவளையில் விழும்
பைசாக்கள்.

*
மரம் வெட்டக் கோடரி
எடுக்கையில்
கைக்குள் குறுகுறுப்பு -
முட்டி முளைவிடும் கைப்பிடி.

*
'எடுக்கவோ கோக்கவோ'
என்றேன்
கலகல வென்று சிரித்தன
வானத்து நட்சத்திரங்கள்.

*
முள் பட்டால் போகட்டும்
தழுவும் ஊக்கு நுனி
நெருடும் சுகமே சுகம்

*
கரையோரக் காதலர்கள்
வந்து வந்து போகப்
பௌர்ணமிக்குக் காத்திருக்கும்
அலைகள்.

-சிற்பி

**மா**தவராவ் பூமியதிர ஓடினான். இடுப்பில் பஞ்சகச்சம் வைத்துக் கட்டிய மிளகாய்ப் பழ நிற வேட்டியும், கையில் இரண்டு பித்தளைக் குடமுமாகப் பொரி வெய்யிலில் தண்ணீர் லாரி நின்ற திசைக்கு ஓடுகிற பொழுது அவன் மனதெல்லாம் உடுப்பியில் இருந்தது...

குளிரக் குளிர மழை பெய்து, துடைத்து விட்டாற்போல சுத்தமான வீதியும், சந்தன வாசனையும், பூ வாசனையும், கோயில் வாசனையுமாக உடுப்பி... பரியாயமும், ஜன்மாஷ்டமியும், எட்டு மாத்வமடத்திலும் பந்தி போஜனமும், யட்ச கானமுமாக அமர்க்களப்படுகிற உடுப்பி...

முப்பது வருஷத்தில் அங்கே கூட எல்லாம் மாறி இருக்கலாம்.

ஆனால் உடுப்பியில் தண்ணீர் லாரி இருக்காது. ''ஹோகி நீரு தொகன்பா... ஜல்தி...'' என்று யாரும் அவசரப்படுத்த மாட்டார்கள்.

தண்ணீர் லாரி வெகு நேரமாக நிற்கிறது போலிருக்கிறது. தமிழில் ஏக காலத்தில் குரல்கள் இரைந்து கொண்டிருக்கின்றன.

''ஐயரே... ஒரு குடம்தான்... அப்பால நகரு...''

முப்பது வருஷமாக இங்கே இருந்தும் இன்னும் தமிழ் சரியாகத் தெரிய மாட்டேன் என்கிறது. 'மாதவராவ் ஒரு தத்தி' என்று எல்லோரும் சொல்வது உண்மைதான்.

''ஸ்வாமி, பிருந்தாவனத்துக்குத் தண்ணி வேணும்!'' - தமிழில் இதை மட்டும் ஞாபகம் வைத்துக் கொண்டால் போதும் என்று மடத்துக் காரியஸ்தர் கருடாச்சார் சொல்லியிருந்தார். சமயத்தில் வார்த்தை நினைவு வராத மறதி...

பிருந்தாவனத்திலும் கிணறு வற்றி விட்டது. நீர் இறைத்து முகமும் கையும் காலும் அலம்பி குருராயரின் சந்நிதிக்குப் போக முடியாமல் எல்லோரும் புழுதி படிந்த கால்களோடுதான் நடக்கிறார்கள். காலையில் கிணறு கொஞ்சம் ஊறும் போது கலங்கலாக இறைத்து மூலராமர் சந்நிதிக்கு வெளியே, பெரிய மரத் தொட்டியில் கொட்டி வைக்கப்படுகிறது.

குடம் இரண்டும் சின்னதுதான். எடுத்து வருகிற குடிதண்ணீர் சாயந்திரத்துக்குள் தீர்ந்து போகிறது. அப்புறம் தெருக்கோடியில் ரிடையர்ட் கலெக்டர் வீட்டில் போய் நின்று, கொடுப்பதை வாங்கி வர வேண்டும்...

இரட்டைக் குழந்தைகள் போல இரண்டு கையிலும் அணைத்துப் பிடித்த குடங்களோடு மாதவராவ் திரும்பிய போது அடுத்த வேலை காத்திருந்தது.

''அரிசினவ மொதல்னே மாடகூ என் என்னு எரடனே மாடகூ தகண்ட் ஹோய் கொடு...''

**இரா.முருகன்**



மடத்தில் முதல் மாடியில் சுபகாரியங்களுக்காகவும், இரண்டாம் மாடியில் அசுப காரியங்களுக்காகவும் இடம் ஒழித்துத் தரப்படுகிறது. முன்னதில் அப்தபூர்த்தியும், கல்யாண நிச்சயதார்த்தமும் நடக்க, மற்றதில் சிரார்த்த காரியம்....

முதல் மாடிக்குப் போக வேண்டிய மஞ்சளை வலது கையிலும், திவச எள்ளை இடது கையிலும் எடுத்துக் கொண்டு மாதவராவ் மாடிப் பக்கம் நடக்க, பிராகாரத்தில் சர்க்கரைப் பொங்கல் நைவேத்யம் முடிந்து பாத்திரங்களை அரையும் குறையுமாக மரத் தொட்டிக்குப் பக்கத்தில் அலம்பி ஊற்றிய தண்ணீரோடு வழியெல்லாம் காலில் ஒட்டுகிற பருக்கை.

இதை மிதித்துக் கொண்டா ஹரிவாயு குருக்களின் சந்நிதியையும் மந்த்ராலய மகானின் சந்நிதியையும் கடந்து போவது?

மாதவராவ் கையில் கொண்டு வந்த



# வெய்ய

ணைக் கிணற்றடி மேடை மேல் வைத்துவிட்டு அவசர அ வ ச ர மா க துடைப்பத்தை எடுத்துப் பெருக்கினான்.

ஒரு வாளி தண்ணீர் இருந்தால் அலம்பி விட்டு விடலாம்...

கிணற்றில் எட்டிப் பார்த்தான். தண்ணீர் சன்னமாக முகம் காட்டியது. தாம்புக் கயிற்றை விட, உள்ளே உள்ளே இறங்கி அரை வாளி வந்தது. போதும்.

''மாதவராவ்...'' மேலேயிருந்து சத்தம்.

''பர்த்தினி...''

**ரா**கவேந்திரர் சந்நிதியில் ஒரு சின்ன வயதுப் பெண் பிராகாரம் சுற்றிக் கொண்டிருந்தாள். வலது காலை சற்றே முன்வைத்து அது பதிகிற இடத்தில் அளந்தாற் போல இடது காலை வைத்து மிக மெல்ல நகர்கிறாள். இருபது வயது இருக்குமா? என்ன பிரார்த்தனையோ... எல்லா ஞாயிற்றுக் கிழமையும் தவறாமல் வருகிற பெண்... கன்னடம்தான்... 'பழம் எடுத்து வைக்கவில்லையா' என்று போன வாரம் கூட வந்த அம்மாளைக் கன்னடத்தில் கேட்டது நினைவு வந்தது...

ஆனால் இங்கே யார் முழுக் கன்னடம் பேசுகிறார்கள்? ஒரு வாக்கியம் பேசுவதற்குள் அவசரமாகத் தமிழுக்குத் தாவி விடுகிறார்கள். மடத்தில் கதாகாலட்சேபம் கூட, பாதி கன்னடமும் மீதி தமிழுமாகத்தான் நடத்தப்படுகிறது.

தேங்காய் நார் உரித்துப் போட்ட நடை வழியாக மாதவராவ் மாடியேறினான்.

முதல் மாடியில், படியை அடைத்துக் கொண்டு நின்றபடிக்குப் பேசுகிற கூட்டம். எல்லாம் தண்ணீர்க் கஷ்டம் பற்றித்தான்.

''லாரி லோடு நானூற்று ஐம்பது ரூபாய்ன்னு எங்க அபார்ட்மெண்ட்லே வாங்கறோம்... பெர் பக்கட் ஒரு ரூபா விழறது... நாலு நாள் வந்தா அதிகம்.''

யாரோ சொல்லிக் கொண்டிருக்கிறார். இவர்கள் யாராவது முயற்சி எடுத்து பத்து நாளைக்கு ஒரு தடவை பிருந்தாவனத்துக்குத் தண்ணீர் கொடுத்தால் கூடப் போதும்... கேட்கலாமா...

முகத்தில் மூன்று நாள் தாடியோடு, தலை பாதி நரைத்து, முகத்தில் எப்போதும் ஒட்டி வைத்த அசட்டுச் சிரிப்போடு மாதவராவ் போய் நின்றால், காலோ அரையோ, பர்ஸைத் திறந்து தட்சணை தருவார்கள்... தண்ணீர் தருவார்களா?

''**பி**ரம்மஹத்தி... கண்ணை முழங்கால்லே வக்கட்டுக் காரியம் பாக்கறியா?''

ஆச்சாரியார் இருமலுக்கு இடையே எரிந்து விழுந்தார். தர்ப்பை நுனிகளில் பிண்டம் வைத்துக் கொண்டிருந்தவர்கள் திரும்பிப் பார்க்க, மாதவராவின் நீட்டிய கையில் மஞ்சள்.

''உன்னால் கால் காசுக்குப் பிரயோஜனம் இல்லை... திவச காரியத்துக்கு மஞ்

சளை எடுத்து வந்து நீட்டறியே... நான் என்ன கேட்டேன்...?''

நல்லவேளை. முதல் மாடியில் என்னைக் கொண்டு போய் நீட்டாமல் முதலில் இங்கே வந்தாகி விட்டது. ஆளாளுக்குத் திட்டி இருப்பார்கள்...

''பேசாம ஊரோட போய்க் கிருஷ்ணான்னு விழுந்து கிட...'' ஆசாரியார் மேலும் திட்ட வார்த்தை அகப்படாமல் திரும்ப மந்திரம் சொல்ல ஆரம்பிக்கிறார்.

திரும்ப எந்த ஊருக்குப் போக? உடுப்பிக்கா? அங்கே பேஜாவர் மடத்தில் வேதம் படிக்க அப்பா ஏழு வயதில் கூட்டிக் கொண்டு போனார். பக்கத்து கரியாலி கிராமத்திலிருந்து அப்பாவோடு கையைப் பிடித்துக் கொண்டு நடந்து போனது மட்டும் இன்னும் மாதவராவுக்கு மறக்கவில்லை.

''ஒரு வாக்கியம் கற்றுக் கொடுத்ததை ஒழுங்காகச் சொல்லத் தெரியவில்லை... சொல்லிக் கொண்டு இருக்கும்போதே மறந்து போய் பேய் முழி முழிக்கிறான்... சாப்பாடு மட்டும் வஞ்சனையில்லாமல் சாப்பிடுகிறான்... இவன் பிரயோஜனப்பட மாட்டான்.''

ஒரே வருஷத்தில் கரியாலிக்குத் திரும்பி விட்டான். தோப்பும் துரவுமாகப் பச்சை விரிகிற அந்தக் கிராமம்... கூட விளையாடின நண்பர்கள்.... கரியாலியில் வீடு இருந்த இடம் புல் முளைத்துப் போயிருக்கும். இல்லை வேறே யாராவது பெரிய கட்டிடமாகக் கட்டிக் குடிபெயர்ந்திருப்பார்கள். உலகம் முழுக்க புத்திசாலிகள் இருக்கிறார்கள்... சுகமாக இருக்கிறார்கள்...

''மாதவராவ்... ஓ மாதவராவ்...''

மடத்து பிரம்மச்சாரிகளில் யாரோ கீழே இருந்து குரல் கொடுத்தார்கள். அவர்களும் உடுப்பியிலிருந்து வந்தவர்கள்தான். வேதமும் துவைத வேதாந்தமும் கரைத்துக் குடித்தவர்கள். கொஞ்ச நாளில் திரும்பிப் போய் தலைமை மடங்களில் பெரிய பொறுப்பு ஏற்கப் போகிறவர்கள். கல்யாணம் செய்து கொள்வார்கள். 'ஆசார்யன் என்ன சொல்கிறான் என்றால்...' என்று தொடங்கி சுவாரசியமாக மூன்று மணி நேரம் சொற்பொழிவு செய்வார்கள். மாதவராவ் அழுக்குத் துண்டால் தோளைப் போர்த்திக் கொண்டு கோலி சோடா உடைத்துக் கொடுப்பான்...

**ப**ந்தி போஜனத்துக்கு நேரமாகி விட்டது. உக்கிராணத்திலிருந்து இலைக் கட்டைத் தலையில் தூக்கிக் கொண்டு மாடிப் படி ஏறினான் மாதவராவ்.

''முட்டாளே... தரை எல்லாம் பூவும் அட்சதையுமாக இறைந்து கிடக்கிறதே... பெருக்கி விட்டு இலை போட வேண்டும் என்று உனக்குப் புத்தியில் படாதா?''

'காலா காலத்தில் கல்யாணம் ஆகியிருந்தால் இவன் வயதில் எனக்கு ஒரு பிள்ளை இருப்பானா...?' மாதவராவ் மீசை அரும்ப ஆரம்பிக்கிற அந்த பிரமச்சாரியை வழக்கமான சிரிப்போடு பார்த்தான்.

''மெட்ராஸில் மடத்து வேலைகளைப் பொறுப்பாகக் கவனிக்க ஆள் இல்லையாம்டா. நீ அங்கே போய் இரேன்... ஒண்டிக் கட்டைதானே... சீக்கிரம் ஒட்டிக்கலாம். முடிந்தால் அங்கேயே கல்யாணம் செய்து கொண்டு நிம்மதியாக இருக்கலாம்...''

முப்பது வருஷம் முன் இப்படிச் சொல்லி உடுப்பியிலிருந்து தன்னை இங்கே அனுப்பியவர்களை நினைத்துக் கொண்டான். இலை போட்டு, எடுத்து, சமித்து கொண்டு வந்து கொடுத்து, தொன்னை செய்து, சந்தனம் அரைத்து, மாவிலைத் தோரணம் கட்டி, தேங்காய் மட்டை உரித்து, அக்னி எடுத்துப் போய், தண்ணீர் சுமந்து வந்து, நாள் தவறாமல் திட்டு வாங்கி முப்பது வருஷம் ஓடி விட்டது. கல்யாணம்?

'மாதவராவுக்குப் பெண் தரணுமா... எத்தனை புத்திமான்... கீதைப் பிரசங்கம் செஞ்சா இன்னிக்குப் பூராக் கேக்கலாம்... என்ன ஆகிருதி... என் பொண்ணு இருக்கா ஸ்வாமி...'

காரில் இறங்கிக் கூட்டம் அலைமோத நிற்கிறார்கள்...

''ஏனு... சொப்பன நோடுதியா... யூஸ் லெஸ் ஃபெல்லோ...''

சின்னப் பையன்களும் நாலு பாஷை படித்து எல்லாவற்றிலும் திட்டுகிறார்கள்.

இரண்டு பந்தி முடிந்த அப்புறம்தான் மாதவராவ் சாப்பிட உட்கார முடிந்தது.

''மணி என்ன?'' என்று அன்னம் பரிமாறியவனைக் கேட்க, அவன் ''தெரிந்து என்ன செய்வதாக உத்தேசம்? சாப்பிட்டு விட்டுத் தூங்கத்தானே போறே...'' என்று இடக்குப் பண்ணினான்.

சாப்பிட்டு விட்டு, பாத்திரம் ஒழித்துப் போட்டு, தேய்க்க உதவி செய்து விட்டு



"தலைவருக்குத் தேரோட்டம் பார்க்கணுமாம்..."

"பக்கத்துல தேர்த் திருவிழா எங்கும் நடக்கலியே!"

"அட, நீங்க ஒண்ணு! கான்டஸா காரு வேணும்கிறதைத்தான் அப்படி சிம்பாலிக்கா சொல்றாரு!"

- பி. ஜி. பி. இசக்கி

மூலராமர் சந்நிதித் தூண் பக்கம் துண்டை விரித்துத் தலை சாயப் போன போது சத்தம்...

''மாதவராவ்... குடிதண்ணீர் தீர்ந்து விட்டது.. போய்க் கோடி வீட்டில் வாங்கி வா...''

சாயந்திரமாகி விட்டதா?

பித்தளைக் குடங்களோடு வெளியே இறங்க, பின்தலையில் வெய்யில் உறைத்தது. நாலு மணி இருக்குமா?

தெருவில் ஏகப் பரபரப்பு. எல்லோரும் உரக்கப் பேசிக் கொண்டு போனார்கள். தெருத் தாண்டி வலது பக்கம் திரும்பி ஓடுகிற கூட்டம்.

என்ன அந்தப் பக்கத்தில்? தண்ணீர் லாரியா? போனால் கிடைக்குமா?

மாதவராவ் தானும் ஓடினான்.

இந்த வயதிலும் ஓடுவதென்றால் எத்தனை சந்தோஷமாக இருக்கிறது... ''எதுக் கெடுத்தாலும் ஓடு... ஆள் வளர்ந்திருக்கியே தவிர புத்தி வளரலியே... உருண்டை வெல்லம் வாங்கி வரச் சொன்னா அச்சு வெல்லத்தோட வந்து நிக்கறே... ஓடு... திரும்பக் கொடுத்திட்டு... இரு... இரு... கடுதாசிலே எழுதித் தரேன்... இல்லேன்னா பொரி கடலையோட வந்து நிப்பே.''

பொரிகடலை கூடச் சாப்பிட நன்றாகத் தான் இருக்கும்... மல்ப்பே கடற்கரையில் சின்ன வயதில் எத்தனை நாள் பொரிகடலையும் பழுப்புச் சர்க்கரையுமாக மென்று கொண்டு நடை போட்டது... மல்ப்பே மாதிரி அழகான இடம் வேறு உண்டா? இந்த ஊர் கடற்கரையில் எப்போதோ போன போது கும்பலாக உட்கார்ந்து எல்லோரும் மிளகாய் பஜ்ஜி தின்கிறதுதான் கண்ணில் பட்டது... மிளகாய் பஜ்ஜி... ஏக காரமாக... ஐயோ இதென்ன... புகையும் தீயுமாக...

பற்றி எரிந்து கொண்டிருக்கிறது. சடசடவென்று விழுகிற மூங்கில் கழிகளும், காய்ந்த ஓலைகளும், டயர் பொசுங்குகிற வாடையும், கூக்குரலுமாக அந்த இடமே அமளிப்படுகிறது...

எல்லாத் திசையிலும் தபதபவென்று ஓடுகிறார்கள். கால்வாளியும் அரைவாளியுமாகத் தண்ணீர் தேடி எடுத்து வந்து ஊற்றித் தோற்றுப் போய் மண்ணை எடுத்து இறைக்கிறார்கள். தரதரவென்று தகரப் பெட்டிகளையும் அலுமினியப் பாத்திரங்களையும் நகர்த்திக் கொண்டிருக்கிறார்கள்....

ஒரு பெண் வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொண்டு அழுகிறாள். அவளைச் சுற்றி இறுக்கமாகப் படிந்த கரங்களைத் திமிறித் தவிர்த்து எரிகிற குடிசைக்குள் சாடிப் பாயத் துடிக்கிறாள்.

''ராசு.. ஐயோ என் ராசு...''

அந்தக் குரல் இடத்தையும் மொழியையும் கடந்து மாதவராவைத் துளைத்தது.

உயிரைத் தொலைத்து விட்டு நிற்கிற



''வரவர நாடு ரொம்ப கெட்டுப் போச்சுடா!''

''ஏன்டா?''

''கட்சியில் ஏற்பட்டிருக்கிற பூகம்பத்தைத் தீர்க்க நிவாரண நிதி வேணுமாம்!''

- எஸ். எஸ். பூங்கதிர்

யசோதை... உயிரான கிருஷ்ணன் ஒங்கி உயர்கிற தீக்கு நடுவில்...

புகைக்கும் நெருப்புக்கும் இடையே அவன் ஓட, அவசரமாகத் தொடர்ந்த குரல்கள் தேய்ந்து ஒரு 'சின்னக் குரல் அழுகிற சத்தம்... புகை நெஞ்சை அடைக்க, கண்ணை இடுக்கிப் பார்த்தான்.

குழந்தை. இரண்டு, இல்லை மூன்று வயதிருக்கும். அபிஷேகத்துக்கு வந்த கிருஷ்ண விக்ரகம் அழுகிறது போல... சுற்றிலும் குதித்து ஆடுகிற தீ நாக்குகள் 'நீயும் வா' என்று அழைத்தபடி நெருங்கி வந்து கொண்டிருக்கின்றன.

''வந்தாச்சு கிருஷ்ணா...''

மாதவராவ் கிருஷ்ணனை ஆரத் தழுவித் தோளில் சார்த்தி எடுத்து வெளியே ஓடி வர, நேர்க்கோடாகச் சரிகிற நெருப்புப் பிழம்பாக மூங்கில் கழி. குழந்தையைப் பலம் கொண்ட மட்டும் வெளியே வீசி எறிகிறான். யசோதா... எங்கே இருக்கே... இந்தா உன் கிருஷ்ணன்..

யாரோ குழந்தையைக் கையில் பிடித்தது புகைக்கு நடுவே மங்கலாகத் தெரிகிறது. கண் இருள்கிறது. ''மாதவராவ்... அக்னியை இடது கையிலே வாங்காதேன்னு எத்தனை தடவை சொல்றது... புத்தியே இல்லாம எதுக்குத்தான் ஜன்மம் எடுத்தியோ?...'' ஆசாரியார் கழுத்து நரம்பு புடைக்க திட்டுகிறார். இடுப்பையும் தோளையும் ஆலிங்கனம் செய்த அக்னி, ''பரவாயில்லே மாதவா... எந்தக் கையானா என்ன... என்னைப் பிடிச்சு எழுந்து வா... கிளம்பு... உடுப்பிக்குப் போகலாம்...'' என்கிறது. பாம் பாம் என்று முழங்கிக் கொண்டு தண்ணீர் லாரி தெருவோடு வர, பச்சையும் சிவப்புமாகப் பிளாஸ்டிக் குடங்கள் முன்னேறுகின்றன... ''ஸ்வாமி பிருந்தாவனத்துக்குத் தண்ணி வேணும்...'' மாதவராவ் குடத்தை நீட்டுகிறான்... ''ஒரு குடம்தான்... இன்னும் வேணும்னா ஊருக்குப் போ...''

''அடுத்த ஜன்மாஷ்டமிக்கு உடுப்பியிலே இருப்பேன்...''

அவன் கண் இமைகள் மெல்லக் கவிந்தன.

# சக்கரவர்த்தித் திருமகன்

ராவணன் தன் கோபத்தை அடக்கிக் கொண்டு சொன்னான் : ''சீதையே, தாபச வேஷம் பூண்ட ஒரு பொய்யனைக் கட்டிக் கொண்டு நீ என்னென்னவோ பேசுகிறாய்! உன் பேரில் எனக்குள்ள பிரியத்தை நான் விட்டுவிட முடியவில்லை. உன் பேச்சுக்களைக் கேட்டு எனக்கு வந்த கோபத்தை அடக்கிக் கொண்டேன். உன்பேரில் எனக்கு ஏற்பட்டிருக்கும் பிரியமே உன்னைக் காத்தது. இல்லையேல் நீ இப்போது மாண்டிருப்பாய். நான் உனக்கிட்ட தவணையில் இன்னும் இரண்டு மாத காலமே இருக்கிறது. அதற்குள் நீ உன் மனத்தைத் திருத்திக் கொள். என் மனைவியாகி என் படுக்கையறைக்கு வருவாய். அதற்கு இஷ்டமில்லாவிடில் என் சமையல் சாலைக்கு அனுப்பப்படுவாய். அங்கே என் வேலைக்காரர்கள் உன் உடலை வெட்டித் திருத்திப் பலகாரமாகச் செய்வார்கள். அறிவாய்!'' என்றான்.

அரக்கர்கள் உணவில் மானிட மாமிசம் சேரும் என்பது பிரசித்தம். ஆனபடியால் ராவணனுடைய இந்த மிரட்டல் வெறும் முரட்டு பாஷையல்ல, நிஜமாகவே நடக்கக் கூடிய நிகழ்ச்சியைப் பற்றி எச்சரிக்கை.

ஆயினும் சீதை மிக தைரியமாக அவனுக்குச் சொன்னாள் : ''ஐயோ! யாரும் இல்லையா உனக்கு நல்ல உபதேசம் சொல்ல? இந்தப் பாவத்திலிருந்து உன்னைத் தப்புவித்து நல்வழியில் உன்னைச் செலுத்தும் நண்பர்கள் யாரையுமே நீ பெறவில்லையா? நீ ராமனுடைய தண்டனையிலிருந்து தப்பப் போவதில்லை. என்ன எண்ணி இந்தப் பாவத்தில் புகுந்து வருகிறாய்? காட்டு யானையைப் போன்ற ராமனுடைய விரோதத்தை முயலைப் போன்ற நீ சம்பாதித்தாய். அவன் பக்கத்தில் இல்லாத சமயம் பார்த்து என்னைத் திருடி வந்த அற்பனே, உனக்கு வெட்கம் இல்லையா? உன்னுடைய விநாசம் நிச்சயம். விதியே உன்னை இவ்வாறு செய்யச் செய்திருக்கிறது. குபேரனுக்குத் தம்பியாகிய நீ, சூரன் என்று பெயர் பெற்றவனாகிய நீ, சதுரங்க சேனையுடைய நீ, ஏன் இந்த நீச காரியத்தை நீச வழியில் செய்தாய்?''

இவ்வாறு சீதை சொன்னதைக் கேட்ட ராவணன் கண்களை உருட்டிப் பயங்கரப் பார்வையோடு சீதையைப் பார்த்துப் பாம்பைப் போல் சீறினான்.

ராவணனுடைய கோபம் வர வர அதிகரித்ததைப் பார்த்து அங்கிருந்த அவனுடைய இளைய மனைவி தான்யமாலி என்பவள் பக்கத்தில் வந்து அரக்கனைத் தழுவி, ''அரசனே! உம்மை விரும்பாத இந்த அற்ப மானுட ஸ்திரீயைப் பற்றி ஏன் கஷ்டப்படுகிறீர்? இவளுக்கு உம்மை அடையும் பாக்கியமில்லை. அவ்வளவே. இவளுக்கு என்ன அழகு இருக்கிறது? இந்த அவலக்ஷணப் பூச்சியைப் பார்த்து ஏன் மோகித்து அலைகிறீர்? போகலாம் வாரும், நாம் சந்தோஷமாக விளையாடலாம்'' என்று அவனை மிகப் பிரியமாக





இழுத்துக் கொண்டு போய் விட்டாள். அரக்கனும் சிரித்துக் கொண்டு அவளுடன் சென்றான்.

**கா**வல் அரக்கிகளுக்கு, ''இவளை எப்படியாவது நீங்கள் வழிக்குக் கொண்டு வரவேண்டும்!'' என்று உத்தரவிட்டு, பூமி அதிரத் தன் பரிவாரத்துடன் ராவணன் அசோக வனத்தை விட்டுப் போய் விட்டான். அவன் போனவுடனே ராக்ஷசிகள் சீதையைச் சுற்றிக் கொண்டார்கள். ராவணன் முன் தைரியமாக இருந்த ஜானகி, பயங்கர வடிவங்களான இந்த அரக்கிகள் தன்னைச் சுற்றி நின்று பேசுவதைக் கண்டு நடுங்கினாள்.

''உயர்ந்த குலத்தில் பிறந்து உலகம் புகழும் வீரனான ராவணன் உன்னை இவ்வளவு விரும்பும்போது நீ இல்லையென்றா சொல்லுவது, மூடப் பெண்ணே? ராவணனை யார் என்று எண்ணுகிறாய்? பிரம்மாவினுடைய வம்சத்தில் நேராகப் பிறந்தவன் என்று தெரிந்து கொள். பிரம்மாவின் புத்திரனான புலஸ்த்ய பிரஜாபதியினுடைய சொந்தப் பேரன் ராவணேசுவரன். அனேக யுத்தங்களில் சத்துருக்களையெல்லாம் வென்று புகழ் பெற்ற வீரன். இவனையா நீ புத்தியில்லாமல் அலட்சியம் செய்கிறாய்?'' என்றாள் ஒருத்தி.

''கர்வப்பட்டுக் கெட்டுப் போகாதே! விச்ரவஸ் ரிஷியின் குமாரன் ராவணன். யாரோ என்று எண்ண வேண்டாம். அவனை நீ விரும்பி சந்தோஷமாயிரு. இவ்வளவு அவன் வேண்டிக் கொள்ள, நீ மாட்டேன் என்பதா?'' என்றாள் மற்றொருத்தி.

''தேவர்களையெல்லாம் யுத்தம் செய்து துரத்தியடித்து ஜயமடைந்த நம்முடைய ராக்ஷசேசுவரன் உன்னை 'வா' என்கிறான். அவனுக்கு நீ மனைவியாகத்தான் போக வேண்டும். ஏழைப் பெண்ணே, இல்லாவிட்டால் பிழைக்க மாட்டாய்!'' என்றாள் இன்னொருத்தி.

''தன் மற்ற மனைவிகளையெல்லாம் உதாசீனம் செய்து உனக்கு அப்புறம் அவர்கள் என்று உன்னை ராவணன் விரும்புகிறான். மிக உத்தம ஸ்திரீகளையெல்லாம் விட்டு நீதான் அழகி என்று உன்னிடம் அரசன் வந்து பிரார்த்திக்கிறான். நீயே பட்ட மகிஷியாய் இரு என்று உனக்கு வாக்கு அளிக்கிறான். நீ ஏன் மூர்க்கத்தனம் செய்கிறாய்?'' என்றாள் மற்றொருத்தி.

''ராவணேசுவரனுக்குச் சமம் உலகத்தில் வேறொருவர் உண்டா? இது உனக்குத் தெரியவில்லையே! தானாக நல்ல பாக்கியம் வந்து உன்னை வேண்டுகிறது, நீ வேண்டாம் என்கிறாய்! உன் மடத்தனத்தை என்னென்று சொல்லுவது!'' என்றாள் வேறொருத்தி.

''தேவர்களும் சூரியனும் வாயுவுங்கூட பயப்படும் ராக்ஷசேந்திரன் வந்து உன்னை வரிக்கிறான். அவனுக்குப் பிரிய பாரியையாக இருக்கும் அதிருஷ்டம் உனக்கு வந்திருக்கிறது. கர்வம் கொண்டு ஏமாந்து போகாதே! வந்த பாக்கியத்தை வேண்டாம் என்று தள்ளாதே!'' என்றாள் ஒருத்தி.

''நாம் சொல்ல வேண்டியதைச் சொன்னோம். இனி உன் இஷ்டம். நீ ஒப்புக் கொள்ளாவிட்டால் நீ சாக வேண்டியதுதான்'' என்றாள் இன்னொருத்தி.

## 68. புத்திமதாம் வரிஷ்டம்

**த**னியாகச் சிறை வைக்கப்பட்ட ஒரு ஸ்திரீ

ஜானகி

எவ்வளவு தைரியசாலியாக இருந்தாலும், எவ்வளவு திடமான உறுதி கொண்டவளாக இருந்தாலும் பல நாள் சிறையில் வைக்கப்பட்டு வாடி வதங்கிப் போனால், மனத் தாழ்ச்சியடைந்து போவதில் ஏதொரு வியப்புமில்லை.

தன்னைக் காக்க வேண்டியவர்கள் வருவார்கள் வருவார்கள் என்று பல மாதங்கள் எதிர்பார்த்தாள். ராமனும் வரவில்லை. லக்ஷ்மணனும் வரவில்லை. மனமுடைந்து நின்றவளுக்குத் தைரியம் சொல்லுவதற்காக எவரும் வரவில்லை. ஏங்கி ஏங்கி மிகக் கஷ்டத்துடன் உயிரை வைத்துக் கொண்டிருந்தாள்.

ராக்ஷஸிகள் பேச ஆரம்பித்தார்கள் :

''நாங்கள் சொல்லுவதைக் கேட்கமாட்டாயா? உன் ஜாதி மனுஷ்ய ஜாதி. உனக்குப் புத்தி இல்லை. ஒரு அற்ப மனிதனையே கட்டிக் கொண்டு அழுகிறாய். உனக்குத் தகுந்த அந்தப்புரம் ராவணேசுவரனுடைய அந்தப்புரம். எல்லா சுகங்களையும் அடையக் கூடிய இடம். அதை வேண்டாம் என்று தள்ளி விட்டு உபயோகமற்ற புருஷனைப் பற்றியே தியானித்துக் கொண்டிருக்கிறாய். ஊரிலிருந்து துரத்தப்பட்ட துரதிர்ஷ்டக்கார மனிதன் ஒருவனிடம் உனக்கு ஏன் இவ்வளவு பிரியம்? அவனை நீ ஒரு நாளும் அடையமாட்டாய். ராவணன் சொல்வதைக் கேட்டுச் சுகத்தை அடை'' என்றார்கள்.

இதைக் கேட்ட சீதை கண்ணீர் விட்டு அழுதாள். ''மகா பாபமான வார்த்தைகளைச் சொல்லுகிறீர்கள். நான் ஒருநாளும் நீங்கள் சொல்வதைச் செய்ய முடியாது. ராமன் ஏழை என்றும், ஊரிலிருந்து துரத்தப்பட்டவனென்றும் சொல்லுகிறீர்கள். அதுவெல்லாம் எனக்குத் தெரியும். இந்தக் காரணங்களைக் கொண்டு புருஷனை மனைவி விட்டு விடுவது மானுட வழக்கமல்ல. ராக்ஷசேசுவரன் ஒரு மானுடப் பெண்ணை விரும்பலாகாது. மானுட ஸ்திரீ எப்படி ராக்ஷசனுக்கு மனைவியாக முடியும்? சூரியனை சூரியனுடைய பிரகாசம் தொடர்ந்து நிற்பது போல் நான், நான் மணந்த ராமனைப் பற்றி நிற்கிறேன். சசிதேவி இந்திரனைப் பற்றி நிற்பது போல், வசிஷ்ட முனிவரை அருந்ததி பற்றி நிற்பதுபோல் நான் ராகவனைப் பற்றி நிற்கிறேன்'' என்றாள்.

இதைக் கேட்ட ராக்ஷசிகள் இனி இவளிடம் சாந்தமாகப் பேசிப் பயனில்லை என்று ''இவளைத் தின்று விடுவதே நலம்'' என்றார்கள்.

ஒருத்தி ''எனக்கு மசக்கை. இவள் மார்பைக் கிழித்து இவளுடைய இதயத்தை நாளத்துடன் இழுத்தெடுத்துத் தின்ன வேண்டும் என்றிருக்கிறது'' என்றாள்.

மற்றொருத்தி, ''இவளைக் கழுத்தைப் பிசைந்து கொன்று விட்டு, துக்கத்தால் செத்துப் போனாள் என்று ராவணனுக்குச் சொல்லி விடுவோம். வீணாக அரசன் இவளை விரும்பித் துயரப்பட்டுக் கொண்டிருக்கிறான். 'செத்துப் போனாள்' என்று தெரிந்தால் பிறகு நம்முடைய அரசன் சுகமாக இவளை நினைக்காமல் தூங்குவான்'' என்றாள்.

''இவளுடைய கல்லீரலும் பிலீகமும் மிக ருசியாயிருக்கும்'' என்றாள் மற்றொருத்தி.

இன்னொருத்தி, ''இவளைக் கொன்று எல்லாரும் உட்கார்ந்து சந்தோஷமாகப் பங்கிட்டுக் கொண்டு சாப்பிட்டுத் தீர்ப்போம். வியஞ்சனங்களைக் கொண்டு வாருங்கள். கள்ளைக் கொண்டு வாருங்கள். இவளைத் தின்று விட்டுக் கள்ளும் குடித்து விட்டு நிரும்பிலா தேவி கோயிலில் கூத்தாடுவோம்'' என்றாள்.

(தொடரும்)

## பொள்ளாச்சி கல்கி வாசகர் வட்டம்

இனிய பொள்ளாச்சி வாசகர்களே!

உங்கள் ஊர் சிறப்பிதழ் தயாரிக்கத் தகவலளித்து உதவியமைக்கு முதல் நன்றி.

30.1.94 அன்று உங்கள் ஊரில் கல்கி வாசகர் வட்டம் கூடுகிறது!

- கவிதைப் போட்டி
- ஜோக்ஸ் போட்டி
- குவிஸ்

ஆகியவை நடக்கவிருக்கின்றன. (தலைப்பு, நிகழ்ச்சி தொடக்கத்தில் அறிவிக்கப்படும்.)

பேனா எடுத்து வாருங்கள்!

நண்பர்களை அழைத்து வாருங்கள்!

நாள் : 30.1.94

நேரம் : மாலை 5 மணி

இடம் : நாச்சிமுத்து பாலிடெக்னிக் அரங்கம்

- ஆசிரியர்

# யாரிடம் கொடுப்பேனடி?



'ஏண்டி, இந்த மாசச் சம்பளத்தை நீ யாருகிட்டக் கொடுக்கப் போறே'ன்னு என் கூட வேலை பார்க்கிற என் தோழி கேட்டப்ப எனக்கு ஒண்ணும் விளங்கலை. 'யார் கிட்டக் கொடுக்கணும்?' நான் பேக்கு மாதிரி அவள்கிட்டயே கேட்டேன். 'சரி தான்; இன்னும் நீ முடிவுக்கு வரலையோ; அடியே, இந்தப் பதினைஞ்சாந் தேதிதான் உனக்குக் கல்யாணம் ஆகியிருக்கு; அது வரை நீ உங்க அம்மா கூட இருந்த; அதுக்குப் பிறகு அங்கயும் இங்கயுமா இருந்து இந்த இருபத்தைஞ்சாம் தேதிக்குப் பின்ன உன் வீட்டுக்கு வந்துட்ட. அதனால இந்த மாசச் சம்பளத்தை நீ உங்க அப்பாகிட்ட கொடுப்பியா, இல்ல உன்னவர்ட்ட கொடுப்பியா?' - விக்கிரமாதித்தன்கிட்ட வேதாளம் கேட்ட மாதிரி முடிச்சுட்டா!

இப்படி ஒரு நெருக்கடி இருக்கா? கடவுளே நான் இப்ப என்ன செய்யிறது?

'ஏங்க, இன்னைக்குச் சாயங்காலம் எங்க அம்மாவைப் போய்ப் பாத்துட்டு வர லாம்னு நெனக்கிறேன்; நீங்க...'

'நான் வர முடியாதப்பா, சாயங்காலம் கொஞ்சம் வேலை இருக்கே...'

'உள்ளூர்தானங்க? நான் மட்டும் வேணும்னா போய்ட்டு வரட்டுமா?'

'அம்மா ஞாபகம் வந்துருச்சாக்கும்! சரி, போய் வா.'

'வாடி' என்று சொல்லிக் கொண்டே விழிகளை மகளுக்குப் பின்னே அனுப்பித் திசைகளைத் துழாவிய அம்மா, 'அவர் எங்கேடி?' என்றாள்.

'உன்னைப் பார்க்கணும் போல இருந் திச்சி. அவருட்ட சொல்லிட்டுத் தாம்மா வந் தேன்.'

'அப்பாவும் வந்து விட்டார். அம்மா வைத் துணைக்கு வைத்துக் கொண்டு அவர் கிட்டயே கேட்டுறணும்' - அம்மாவையுங் கூட்டிக் கொண்டு போனாள். 'ஏப்பா, எனக்கு ஒன்னு தெரியலை; நீங்கதாம்பா சொல்லணும். இந்த மாசச் சம்பளத்தை நான் உங்ககிட்டயா, இல்ல அவுங்க கிட்டயா, யார்கிட்ட கொடுக்கணும்...?'

பி.ஏ. படித்த மகள் உள்ளபடியே விடை தெரியாமல் நிற்பதைப் பார்த்து அப்பாவிற்கும் என்ன சொல்வது என்று முதலில் தெரியவில்லை. 'ஆமாம்; இப்படி ஒரு விசயம் இருக்கு என்பதே நினைவுக்கு வராமப் போச்சே' என்று எண்ணியவர், 'ஏன், அவங்க ஏதாச்சும் சொன்னாங்களா?' என்று கேட்டார்.

'அவுங்கள்லாம் ஒண்ணும் கேக்கலைப்பா; என் கூட வேலை பாக்குற பொண்ணு சொன்ன பிறகு தான் எனக்கே இதப்பத்தி யோசிக்கத் தோணிச்சு. உங்களைக் கேட்டாத்தான் சரியா இருக்கும்னு ஓடியாந்தேன்.'

'இதுக்கா இவ்வளவு அவசரமா வந்தே! பரவாயில்லை; இது ஒரு சிக்கலான கேள்வி தான்; இதுக்குச் சட்டம், தர்மம்லாம் சரியான விடை தர முடியாது. அவுங்க அவுங்க மன வளர்ச்சிதான் விடை! உன்னை விடவாம்மா எங்களுக்குப் பணம் பெரிசு? எப்ப உன்னையே இன்னொரு வீட்டுக்கு உரிய பிள்ளையாய் அனுப்பிட்டமோ அப்ப இந்த மாசச் சம்பளத்தையும் அனுப்புறதுல எங்களுக்கு ஒண்ணும் சிரமம் இல்ல; சம்பளத்தை அங்கயே கொடு; அதுதான் உன் எதிர்காலத் துக்கும் நல்லது' என்று சொன்னவர், தன் மகள் தன்னிடம் வந்து இப்படியொரு கேள்வியைக் கேட்டதில் மகிழ்ந்து போனார்...

'இல்லப்பா, போன மாசம் பாதிக்கு மேல நான் இங்கதானே இருந்துருக்கேன்...'

'நீ சொல்றது வியாபாரத்துக்குச் சரி; கல்யாணம் வியாபாரம் இல்லம்மா! ஆயிரங் காலத்துப் பயிரு! அதுல இரு பக்கத்துக்கும், உனக்கும் எது நல்லதோ அதைத்தான் செய்ய ணும். இனி இந்தப் பேச்ச விட்டுடு. நீ சந்தோசமா இருக்கிற என்கிறதுதான் எங்களுக்கு எல்லாமே' அவர் முடித்து விட்டார்.

இரவு. அவன் மெல்லத் தொடங்கினாள்... 'ஏங்க, நாளைக்குச் சம்பளம். நான் அதை யாருகிட்ட கொடுக்க?'

'யாருகிட்டன்னா?'

'இல்லை, உங்ககிட்டயா? உங்க அப்பாகிட்டயா?'

'வீட்டுக்குப் பெரியவரு அப்பாதான்; அவருகிட்டயே கொடுத்துரு' அவன் படுத்து விட்டான். அவளுக்குத் தூக்கம் வரவில்லை. 'என்ன இவரு... ஒரு மரியாதைக்குக் கூட இந்தச் சம்பளம் உங்க வீட்டுக்குத்தான் சேர ணும்; அவுங்ககிட்டயே கொடுத்திரு' என்று சொல்லியிருக்கக் கூடாதா... பணம்னா கொஞ்சம் அப்படி இப்படித்தானோ...? இருக்காது. இவரும் என்னை மாதிரி யதார்த்த உலகம் தெரியாதவரா இருப்பாரா இருக்கும்; எனக்கும் என் தோழி சொன்ன பிறகுதானே விளங்கிச்சு? அது மாதிரி இவருக்குச் சொல்ல ஆள் இல்ல போல...'

உறங்கி விட்டாள்.

சம்பள நாள். மாலையில் வீட்டிற்கு வந் தாள். 'அத்தை, மாமா இங்க இருங்க' என்று சொல்லிக் கவரை மாமா கையில் கொடுத்து வணங்கி எழுந்தாள். 'மாமாவிற்கும் அத் தைக்கும் இத்தனை மகிழ்ச்சியா? பணம் அல்லவா...' மனத்திற்குள் ஒரு நெருடல்.

கொஞ்ச நேரம் கழித்துப் பெரிய வர், இருவரையும் ஹாலுக்குள் அழைத்தார். இருக்கச் சொன்னார். தன் மனைவியையும் உடன் வைத்துக் கொண்டு, 'தம்பி, குழந்தை இந்த மாசச் சம்பளப் பணத்தை எங்ககிட்ட கொண்டு வந்து கொடுத்திச்சு; எங்க இரண்டு பேருக்கும் அதுல ரொம்ப மகிழ்ச்சி. ஆனா இந்தப் பணம் நியாயமா உன் மாமனார் வீட் டுக்குத்தான் போகணும். அடுத்த மாசம் நாம வாங்கலாம். அதனால குழந்தை கூட நீ இன் னைக்கே போய் உன் மாமன், மாமியைப் பார்த்து, நான் சொன் னேன்னு சொல்லி இந்தப் பணத்தைக் கொடுத்துட்டு வா.'



'அவுங்க வேண்டாம்னு சொல்லிட்டா...?' அவன் முந்தினான்.

'வாங்கிக்கிட்டு வந்தி ராதீங்க; அவுங்க அனுமதிய வாங்கி அவுங்களுக்கு உப யோகப்படுற எதையாவது வாங்கிக் கொடுத்து வணங் கிட்டு வாங்க. இந்தக் குழந் தைக்கு இனி நாங்கதான் தாய் தந்தைனா, உனக்கு அவுங்களும் தாய் தந்தை தான். இந்தக் காக பண வரவை விட, அவுங்க நல் லாசி உங்களுக்கு ரொம்ப நல்லது...'

அவன் விழிகளில் ஆனந்தக் கண்ணீர் ஊற் றெடுக்க, அவளைப் பார்த் துச் சிரித்தான்.

– சாலமன் பாப்பையா

## ஸ்ரீரங்கம் – திருவானைக்காவல் – சமயபுரம் வாசகர்களே!

அடுத்தது உங்கள் ஊர் சிறப்பிதழ்தான்!

கதைகள், கட்டுரைகள், செய்திகள் - எதுவாயினும் எங்களுக்கு 15.2.94க்குள் கிடைக்கும்படி எழுதி அனுப்புங்கள். நீங்கள் தரும் தகவல்களின் அடிப்படையில் எமது நிருபர்கள் வந்து பார்த்த பின் வெளியிடுகிறோம். உறை மேல் மறக்காமல் ஸ்ரீரங்கம் - திருவானைக்காவல் - சமயபுரம் சிறப்பிதழ் எனக் குறிப்பிட்டு எழுதுங் கள்.

- ஆசிரியர்.



# அ.தி.மு.க : நெல்லிக்காய் மூட்டையில் நிறையவே ஓட்டைகள்!

''நடக்குமா?'' அ.தி.மு.க. விலிருந்து நீக்கி வைக்கப்பட்ட ஜி. விஸ்வநாதன், அழகு திருநாவுக்கரசு, எஸ். ஆர். ராதா ஆகியோர் தஞ்சையில் ஏற்பாடு செய்திருந்த எம்.ஜி.ஆர். பிறந்த தின விழா பற்றித்தான் மேற்படி கேள்வி பரவலாகக் கேட்கப்பட்டு வந்தது.

நடக்கவிடாமல் செய்ய, ஆளும் கட்சியும் ஆட்சியும் எத்தனைவிதத் தடங்கல் செய்யலாமோ செய்தது. ஆனாலும் விழா நடந்து விட்டது என்பதே பெரிய வெற்றியாகக் கருதப்படுகிறது. எனவே தடங்கல் செய்யாமல் ஒத்துழைப்பு தருவதே அரசுக்குக் கௌரவமாக இருந்திருக்கும். இப்போது தலைகுனிவைத்தான் அடைகிறது. எஸ். ஆர். ராதா காலரைத் தூக்கி விட்டுக் கொள்ளக் காரணங்கள் உண்டு :

நிகழ்ச்சிக்கு முதலில் ஒரு திருமண மண்டபத்தை ஏற்பாடு செய்திருந்தனர். மண்டபத்தின் சொந்தக்காரர் திருநாவுக்கரசு கட்சியைச் சேர்ந்தவராயினும் அவரை வளைத்துப் போட்டு, மண்டபத்தைக் கொடுக்காமல் வாபஸ் பெறச் செய்து விட்டனர். பின்னர் மத்திய அரசுக்குச் சொந்தமான ரயில்வே கல்யாண மண்டபம் ஏற்பாடு செய்யப்பட்டது. அதற்கும் உயர் அதிகாரிகள் மூலம் 'பிரஷர்' தந்து மண்டபம் மறுக்கப்பட்டது. கடைசியாக தூய இருதய ஆலய சமுதாயக் கூடம். இதற்குப் பொறுப்பான பாதிரியாரிடமும் மேலிடம் மிரட்டலைக் காட்டியிருக்கிறது. அவரோ, ''இது எம்.ஜி.ஆர். பிறந்த தினக் கொண்டாட்டம் மட்டுமல்ல; ஏழைகளுக்குத் திருமணம் செய்து வைக்கிறார்கள்; நல்ல காரியத்துக்கு உதவத் தான் நாங்கள் இருக்கிறோம்'' என்று கூறி விட்டார்! மேலும் வற்புறுத்தியபோது ''உங்களுக்கு பாஸ் யாரானாலும் சரி, எனக்கு பாஸ் ஏசுதான்'' என்று சொல்லி விட்டார்!

அந்தப் பாதிரியாரின் நேர்மையும் துணிச்சலும் பாராட்டுக்குரியது. ஜி.வி. அண்டு கோவின் வெற்றிக்கு அடிப்படை இவரது துணிவே.

மண்டபத்துக்கு வெளியே இருந்த பந்தலை நீக்க முயன்றது, ஹோட்டல்களில் இடம் தராதது, கொடிகள், பேனர்கள் கட்டத் தடை என்று பல தொல்லைகளையும் தாண்டி விழா நடந்தேறியது.

''எம்.ஜி.ஆர். பெயரை மறைக்க முயலும் ஜெயலலிதா, நாங்கள் விழா எடுக்கிறோம் என்றதும் தாமும் மாலை போட்டு மரியாதை செய்ய முன்வந்திருக்கிறார். இதுவே எங்கள் வெற்றிதான்'' என்றார் ஜி. விஸ்வநாதன்.

எம்.ஜி.ஆர். புகழ் பாடுவதை விட ஜெ. எதிர்ப்புக் குரல்தான் விழாவில் அதிகமாகக் கேட்டது.

புலிகள் அச்சுறுத்தல் காரணமாக ஆளுனர் வரவில்லை என்ற குறை ஒருபுறம் இருந்தபோதிலும், மூப்பனார் வந்து சேர்ந்து விட்டதில் ஒரே உற்சாகம். மண்டபம் கொள்ளாத அளவில் கூட்டம்.

தஞ்சையில் நடந்த விழா ஒரு விஷயத்தைத் தெள்ளத் தெளிவாக்கியது. 'பிளவு என்பது காங்கிரஸ், தி.மு.க., பா.ம.க. ஆகியவற்றில்தான்; அ.தி.மு.க. கட்டுக்கோப்புடன் உள்ளது' என்ற மாயை தகர்க்கப்பட்டிருக்கிறது. நெல்லிக்காய் மூட்டையில் நிறையவே ஓட்டைகள்! உருண்டு ஓடாமல் காப்பது ஆட்சி அதிகாரம் என்ற தையலே!

– ப்ரியன்

சிவமயம்

# கோமல் அருள்மிகு
# அன்னபூரணி அம்பாள் சமேத
# அருள்மிகு கிருபா கூபேஸ்வர சுவாமி
# ஆலய அஷ்ட பந்தன
# மஹா கும்பாபிஷேகம்

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ பரமாச்சார்யாள் அனுக்கிரஹ ஆணைப் படி, நாகை மாவட்டம், மயிலாடுதுறை வட்டம், கோமல், அருள்மிகு அன்னபூரணி அம்பாள் சமேத கிருபா கூபேஸ்வர சுவாமி ஆலயத்துக்கு ஜீரணோத்தாரணம் கடந்த 17.1.94 அன்று சிறப்பாக நடைபெற்றது.

திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குரு மஹாசன்னிதானம் அவர்களது திருவுளப்பாங்கின் வண்ணம் நடைபெற்ற இவ் வைபவத்தின் போது ஸ்ரீ ராமருக்குப் புதிதாக ஆலயம் அமைக்கப்பட்டது.

கோமல் பிரம்ஹஸ்ரீ டாக்டர் எஸ். சுவாமிநாதன், அவர் மனைவி திருமதி ராஜலக்ஷ்மி ஆகியோர் சொந்த செலவில், சீர்காழி, வி.என். ராஜ கோபாலய்யர் நிர்வாகத்தில், நடத்தப்பட்ட இப் புனித நிகழ்ச்சியில் ஏராள மான ஆத்திக அன்பர்கள் கலந்து கொண்டு ஈசன் அருள் பெற்றார்கள்.

உ

தியாகராஜரே துணை



# அருள்மிகு தியாகராஜ ஸ்வாமி
# திருக்கோயில், திருவாரூர்
# அருள்மிகு கமலாம்பாள்
# கோடி அர்ச்சனை

மெய் அன்பர்களுக்கு வேண்டுகோள்.

இத் திருக்கோயிலில் அருளை வாரி வழங்கும் அம்பிகை அருள்மிகு கமலாம்பாள் தனிக் கோயிலாக ஈசானிய திசை நோக்கி யோகநிலையில் வீற்றிருந்து உலகத்தை காத்து வருகின்றாள். சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான ஸ்ரீ தீக்ஷிதர் ஸ்ரீகரி சுகரி ஸ்ரீ மஹாதிரிபுரசுந்தரி என பாடி மகிழ்ந்த அன்னைக்கு பக்தப் பெருமக்களின் பேராதரவினால் கோடி அர்ச்சனை தினசரி செய்யப்பட்டு வருகிறது. பாரத தேசத்தின் புகழ்மிக்க 64 சக்தி பீடங்களுள் தலையாயது என சக்தி உபாசகர்களால் பெரிதும் போற்றும் கமல பீடமான பராசக்திக்கு அன்பர்கள் அனைவரும் கோடி அர்ச்சனையில் பங்கேற்று அம்பாளின் அருளை முழுமையாகப் பெற அன்புடன் வேண்டுகிறோம்.

ஒரு சகஸ்ரநாம அர்ச்சனைக்கு ரூ. 50/- ஏகதின லட்சார்ச்சனைக்கு ரூ. 2500/- அர்ச்சனையில் பங்குபெறுவோர் தங்கள் பெயர், விலாசம், நட்சத்திரம் முதலியவைகளை மணிஆர்டர்/டிமாண்ட் டிராப்ட் மூலமாக குறிப்பிட்டு செயல் அலுவலர், அருள்மிகு தியாகராஜஸ்வாமி திருக்கோயில், திருவாரூர் - 610 002 என்ற முகவரிக்கு தங்களது காணிக்கைகளை அனுப்பி வைக்க வேண்டுகிறோம். சகஸ்ரநாம அர்ச்சனையில் பங்குபெறும் பக்தர்களுக்கு அன்னையின் உருவம் பதித்த வெள்ளி டாலரும், ஏகதினலட்சார்ச்சனைக்கு வெள்ளி டாலர்கள் 10ம், வழங்கப்படும். நேரில் வர இயலாத பக்தர்களுக்கு பிரசாதம் தபாலில் அனுப்பி வைக்கப்படும்.

இங்ஙனம்,

திருக்கோவில் நிர்வாகிகள்

# அழகன்

★ ஜே. பி.



ஜெயப்பிரகாஷ் நாராயணனின் சுருக்கம் ஜே. பி. பொள்ளாச்சியின் ஆணழகன். கோவை மாவட்டத்து ஹீரோ. அகில இந்திய ஆணழகர் சங்கத்துக்குத் - தமிழகத்தின் நன்கொடை.

1980 இல் உடற்பயிற்சி செய்ய ஆரம்பித்தவர், '81 இல் உடல் வனமைப் போட்டிகளில் கலந்து கொள்ளத் தொடங்கினார். 82 இல் மாநில அளவுப் போட்டிகளில் நுழைந்து, கொஞ்சம் கொஞ்சமாக உயர்ந்து - இன்று தேசிய பளு தூக்கும் போட்டிகளின் நடுவராக உயர்ந்திருக்கிறார். ஏராளமான பட்டங்கள். மிஸ்டர் கோவை, மிஸ்டர் பொள்ளாச்சி, மிஸ்டர் தமிழ்நாடு... ஏரான பதவிகள், பொறுப்புகள்... இத்தனைக்கும் பின் அமைதியாக ஜே. பி!

பொள்ளாச்சியில் உடற்பயிற்சிக்கூடம் ஒன்று வைத்திருக்கிறார்.

"பத்து வருடத்திற்கு முன்பு உடற்பயிற்சி என்றாலே முரட்டுத்தனத்தின் அறிகுறி. பயிற்சி செய்பவனை சண்டைக்காரன், குண்டன் என்றெல்லாம் பேசுவார்கள். அரசியல் கட்சிக்காரர்கள் உடற்பயிற்சி செய்வோரை, அடியாட்களாகப் பயன்படுத்திக் கொள்ள முயற்சி செய்வார்கள். இத்தனை வருடம் கழித்து, இப்போதுதான் மக்களுக்குக் கொஞ்சம் தெளிவு ஏற்பட ஆரம்பித்திருக்கிறது. உடல் நலனுக்குத்தான் உடற்பயிற்சி. ரவுடித்தனத்துக்கல்ல! சொல்லப்போனால் உடற்பயிற்சி செய்பவர்கள் மனம் ஒருவித பக்குவத்துக்கு வந்துவிடுகிறது.

ஓட்டலில் ஒரிஜினல் தேங்காய் சட்னி வேணுமா? பொள்ளாச்சி போகவும். எங்கும் தென்னை மரங்கள். மண் வளம், பருவ நிலை, அளவான மழை என்று தென்னைகளுக்கான ஆசீர்வாதங்கள் இங்கு நிறைய. விளைவு, பொள்ளாச்சி ஓட்டல்களில் ஒரிஜினல் தேங்காய் சட்னி. சுவையும் அபாரம்!

தென்னை மட்டைக்கும் மவுசு! பொள்ளாச்சியில் சுமார் 150 தென்னை நார் தொழிற்சாலைகள் உள்ளன. இவற்றுள் 15 தொழிற்சாலைகள் கயிறையும் தயாரிக்கின்றன.

முதலில் தென்னை மட்டைகளை ஆயிரக் கணக்கில் வாங்குகிறார்கள். அதைத் தண்ணீரில் ஒரு வாரம், பத்து நாட்கள் ஊறவைக்கிறார்கள். பின்னர் அரவை இயந்



★ பச்சையப்பன்

★ மஞ்சு மலை....



வம்புகளுக்கெல்லாம் செல்ல அவர் கள் பெரும்பாலும் விரும்புவ தில்லை'' என்கிறார் ஜே.பி.

'உடலழகு' என்பது 'தியானம்' போன்றதொரு பயிற்சிதான் என்றும் விளையாட்டுத் துறையில் இதுவும் ஓர் அங்கமே என்கிறார் இவர். இதன் காரணமாகவே, ஒலிம்பிக் போன்ற உலகளாவிய போட்டிகளில் ஆண்ழகர் போட்டிகளையும் சேர்க்கச் சொல்லி வலியுறுத்தி வருவதாகச் சொல்கிறார்.

''தீவிரமான உடற்பயிற்சி மூலம் மனம் நிலைப்படும். ஒரு வித தியான நிலைக்கு மனம் செல்வதால் படிப்பு, பணி எதுவாயினும் சிறப்பாகச் செய்ய முடியும்'' என்கிறார் ஜே. பி!

ஜே. பியிடம் மீதியொரு விசேஷம் - இவர் ஸ்போர்ட்ஸ்மென் கோட்டாவில் வேலை பெறவில்லை. சுய முயற்சியால்தான்! சேரன் போக்கு வரத்துக் கழகத்தில் பணியாற்று கிறார் ஜே. பி.!

– வெங்கி

# மஞ்சுத் திண்டுக்கு வடக்கே மவுசு!

திரத்தில் ஊறின மட்டைகள் அனுப்பப்படுகின்றன. கழிவு போக, சுத்தமான தென்னை நார் வெளி வருகிறது. ஈரமான இந்த நார் உலர்த்தப்படுகிறது. இதன் பெயர் மஞ்சு. பார்ப்பதற்கு இலவம் பஞ்சு!

கண்ணன் கர்ல்டு காயரும், கண்ணன் காயர் புராடக்ட்ஸ்ஸும் முக்கிய நிறுவனங்களுள் இரண்டு. இவற்றின் - நிறுவனர் பச்சையப்பனைச் சந்தித்தோம்.

● கயிறு திரிப்பது மெஷினாலே!



''மஞ்சு தொழிற்சாலைகள் மட்டுமே, பல உள்ளன. அதிலும் இரண்டு வகை உண்டு. ஒரு வகை மஞ்சு கேரளாவிற்குப் போகிறது. மற்றொருவகை சேலத்திற்கு. அங்கே மஞ்சி லிருந்து மிதியடிகள், தரை விரிப்புகள் செய் கிறார்கள்'' என்கிறார் பச்சையப்பன்.

''கண்ணன் கர்ல்டு காயரில் மற்றொரு வேலையும் செய்கிறோம். அரை இன்ச், முக்கால் இன்ச், ஒரு இன்ச் கனத்திற்கு மஞ்சைகயிறு திரிக்கிறோம். இதைப் பெரும்பாலும் நாங்கள் வட இந்தியா வுக்கு விற்கிறோம். முக்கியமாக டெல்லி. அங்கே இந்தக் கயிறு பிரிக்கப் படுகிறது. பிரித்த கயிறிலிருந்து கிடைக்கும் நார் வளைந்து, சுருண்டு கொண்டிருக்கும். அதைப் பதப் படுத்தி மெத்தை, தலையணை, திண்டு போன்ற வற்றைச் செய்கிறார்கள்.

''பொள்ளாச்சியிலுள்ள விவசாயக் கூலிகளுக் கான இன்னொரு தொழிலாக மஞ்சுத் தொழில் வளர்ந் திருக்கிறது. இதற்கென்று எதுவும் பாடமில்லை. பயிற்சியில்லை. எல்லாம் பழக்கத்தில் வருவதுதான். மஞ்சை மிதியடிகளாகவும், மெத்தையாகவும், தலை யணையாகவும் இங்கேயே செய்ய முடியும். அதற் கான தொழில் முதலீடுதான் அதிகம். அரசு மான்யம், உதவி என்று ஏதாவது செய்தால், இங்கேயே மற்றத் தொழில்களையும் வளர்த்துவிடலாம்'' என்று நம்பிக் கையுடன் கூறுகிறார் பச்சையப்பன்.

**நா**ர் தொழிற்சாலையின் முக்கிய பிரச்னை நார் கழிவே. இது கலபத்தில் தீப்பிடிக்கிறது. என்ன செய் வது என்று தெரியாமல் பலர் யோசித்துக் கொண் டிருக்கிறார்கள். காயர் போர்ட்டில் ஆராய்ச்சி செய்து, நார் கழிவுக்கு வேறு உபயோகம் கண்டுபிடிக்க முயற்சி மேற்கொண்டால் நன்றாயிருக்கும் என்பது பச்சையப்பனின் கருத்து.

– ராஜன்

தகவல் : மாணிக்கவாசகம், பொன்ராஜ்.

* வி.பி. சந்திரசேகரன்



# "எல்லாம் அம்மாவுக்குத் தெரியும்!"

பொள்ளாச்சி தொகுதி எம்.எல்.ஏ. வி.பி. சந்திரசேகரன், வாரத்தில் இரண்டு நாட்கள் சென்னையிலும் மீதி நாட்கள் பொள்ளாச்சியிலுமாக காலில் சக்கரம் கட்டிக் கொள்ளாத குறை! சமீபத்தில் ஜெ.வின் பார்வை இவர் பக்கம் பட, குடிநீர் - வடிகால் வாரியத் தலைவராக ஆகியிருக்கிறார்.

இளைஞர். துண்டு, கரை வேட்டி என்றெல்லாம் பிரகடனம் செய்யாமல் நம்மைப் போல் கேஷுவலாக இருக்கிறார். எல்லாவற்றையும் விட முக்கியம் - ஊர் மக்களிடையே நல்ல பெயரை வாங்கியிருக்கிறார்! அவருடன் ஒரு சந்திப்பு.

''உங்கள் முதல் அரசியல் பிரவேசம் குறித்து...?''

''1972-ல் நுழைந்தேன். பள்ளி நாட்களிலிருந்தே நான் தலைவரின் (எம்ஜியார்) ரசிகன். எனது அரசியல் பிரவேசமும் அவராலேயே நிகழ்ந்தது. அப்பா, காங்கிரஸ்காரர். குடும்பத்தில் வேறு சிலரும் காங்கிரஸ் அனுதாபிகள். வீட்டில் நான்தான் முதல் அ.தி.மு.க.காரன்!''

''எம்.எல்.ஏ.வானது...?''

''1989-ல்தான் முதலில் போட்டியிட்டேன். இன்று வரை இங்கு வேறு எந்தக் கட்சியும் ஜெயித்ததில்லை. அதற்கு முன்பே கூட தலைவர் இருந்த போது, இந்தத் தொகுதி நகராட்சித் தலைவருக்கான தேர்தலில் ஸீட் கொடுத்தார். ஆனால் அப்போது திடீரென்று உருவான காங்கிரஸ் கூட்டுறவினால் அது எனக்கு இல்லாமல் போயிற்று!''

''ஊரில் உங்களைப் பற்றி அதிகம் பேசுகிறார்களே, ஆட்சிக்கு வந்து அப்படி என்ன செய்திருக்கிறீர்கள்?''

''எப்போதும் தொகுதியிலேயே இருக்கிறேனே! (சிரிக்கிறார்) ...பெரிதாக ஏதும் செய்தால்தான் என்றில்லை. மக்களின் சிற்சிறு பிரச்னைகளில் தலையிட்டு தீர்த்து வைத்தாலே போதும். சாதனை செய்ய வேண்டுமென்பதை விட ஏதாவது நல்லது செய்ய வேண்டும் என்று நினைக்கிறேன்.''

''உதாரணம்...?''

''பொள்ளாச்சி பஸ் ஸ்டாண்ட் மிகவும் குறுகலாக இருக்கிறது. எல்லாப் பேருந்துகளும் அங்கேதான் அடைய வேண்டியிருக்கிறது. இந்த நெரிசலைத் தவிர்க்க, பஸ் ஸ்டாண்டை விஸ்தரிக்க, காவல் துறையிடமிருந்து 1.8 ஏக்கர் நிலம் வாங்கி இருக்கிறோம். விரைவில் இந்த பஸ் ஸ்டாண்ட் நெரிசல் பிரச்னைக்கு முற்றுப்புள்ளி வைத்து விடுவோம்!

''இன்னொரு முக்கியமான பணி, சாலை போடுதல். இப்போது பொள்ளாச்சி முழுவதும் சாலைகள், துப்புரவாகப் போடப்பட்டு விட்டன. 8 கி.மீ. ரோடுதான் இன்னும் பாக்கி!''

''என்ன இப்படிச் சொல்கிறீர்கள்? வழியெங்கும் மேடும், பள்ளமும், குழியும் கிணறுமாக - இதையா சாலை என்கிறீர்கள்?''

''இல்லை, இல்லை. இது தற்காலிக நிலை. குடிநீர்க் குழாய் அமைப்புப் பணி

தொகுதியெங்கும் நடைபெற்று வருகிறது. அதான் ஆங்காங்கே தோண்டியிருக்கிறார்கள். விரைவில் இது சரியாகி விடும். அடுத்த முறை வந்து பாருங்களேன்...''

''நீங்கள் குடிநீர் வாரியத் தலைவரானதும் உங்கள் தொகுதிக்கு முதல் கவனிப்பா?''

(சிரித்தபடி) ''ஆமாம்! திட்டம் மிக மும்முரமாக இங்கே செயல்பட்டு வருகிறது. விரைவில் தொகுதி முழுக்க பைப் மூலம் குடிநீர் வழங்கும் திட்டம் நடைமுறைக்கு வந்துவிடும். தோண்டப்பட்டுள்ள சாலைகளை மீண்டும் சரிசெய்யவும் இதர செலவுகளுக்குமாக உலக வங்கியிடம் ரூ 66 லட்சம் கடன் வாங்கியிருக்கிறோம்!''

''உங்கள் தொகுதிக்கு மட்டும்தான் இத்திட்டமா? அல்லது இதர பகுதிகளுக்கும் அனுமதிக்கப்பட்டிருக்கிறதா?''

''இது மூன்றாவது குடிநீர் திட்டத்தின் ஒரு பகுதி. எல்லா ஏரியாவுக்கும் பொதுவானதுதான். இங்கு கொஞ்சம் வேகமாக நடைபெறுகிறது. அவ்வளவுதான். இத்திட்டத்தின் மொத்த செலவாக ரூ. 11 கோடி நிர்ணயித்திருக்கிறார்கள். இப்போது நகரத்தில் 70 லட்சம் லிட்டர் தண்ணீர் தினம் தரப்படுகிறது. இத்திட்டம் நடைமுறைக்கு வந்த பிறகு அது 210 லட்சம் லிட்டராக உயரும். இந்தத் தொகுதியைப் பொறுத்தவரை 2015 வரை தண்ணீர் பிரச்னையே வர வாய்ப்பு

''செய்யலாம்!''

''தொகுதி மக்களின் குறைகளைத் தீர்க்க நீங்கள் நேரடி கவனம் செலுத்துவதாகச் சொல்கிறார்கள். ஆனால் PKS காலனி முழுவதும் அருகிலுள்ள அரிசி ஆலையிலிருந்து கிளம்பும் சாம்பலாலும் உமியாலும் நிரம்பி மிகவும் சுகாதாரக் கேடாக உள்ளதே. இதை நீங்கள் கவனிக்கவில்லையா?''

''மன்னிக்க வேண்டும். இன்றுவரை இது என் கவனத்திற்கு வரவில்லை. உடனே நடவடிக்கை எடுக்கிறேன்!''

''அப்புறம் கோட்டூர் ரோடில் உள்ள அந்தத் தெப்பக்குளப் பள்ளி... கழிப்பிடமாகவல்லவா மாறிவிட்டிருக்கிறது?''

''இதை நான் பலமுறை கவனித்து நடவடிக்கை எடுத்தும் பிரயோஜனமில்லாது போய் விட்டது. அந்தப் பள்ளியின் புனிதத் தன்மையே பாழாகி விட்டது. வெறும் மிரட்டல்களாலும் தண்டனைகளாலும் இதனைத் தடுக்க முடியும் என்று தோன்றவில்லை. விரைவில் நகராட்சியுடன் கலந்து பேசி, அந்தப் பகுதியில் ஏதேனும் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ் கட்டி வாடகைக்கு விட ஏற்பாடு செய்ய எண்ணிக் கொண்டிருக்கிறேன்.''

''பொதுவாக ஒரு கேள்வி. மறுபடி காங்கிரஸுடன் கூட்டு என்று சில எம்எல்ஏக்கள் பேசியுள்ளார்களே இன்று... (ஜனவரி முதல் வாரம் - இந்த சந்திப்பு) அது

## - பொள்ளாச்சி எம்.எல்.ஏ. பேட்டி!

இல்லை!''

''இத்தனை அழகான ஊரை சினிமாவில் மட்டும் பார்த்துக் கொண்டிருந்தால் போதுமா? சுற்றுலா வளர்ச்சிக்கு ஏதேனும் செய்யலாமே?''

''செய்யலாம் ! ஆனால் நீங்கள் குறிப்பிடுகிற சுற்றுலாப் பிரதேசங்கள் எதுவும் துரதிருஷ்டவசமாக என் தொகுதியின்கீழ் வரவில்லையே? (சிரிக்கிறார்.)''

''நாங்கள் கவனித்த வரையில், இங்கு பிளாட்பாரங்கள் மெட்ராஸை விட மோசமாகத் தெரிகின்றன. பிளாட்பாரவாசிகளை அப்புறப்படுத்தினால் பாதி அசுத்தம் குறையுமே?''

''நியாயமான கேள்வி. அது என்னமோ தெரியவில்லை... அவர்களை அப்புறப்படுத்த எனக்கு மனமே வரமாட்டேனென்கிறது. பாவம், அவர்கள். வேறு எங்கு போவார்கள்? எங்கும் இடமில்லாததால் தானே இங்கு வருகிறார்கள்?''

''குடியிருப்புப் பகுதி ஏதேனும் கட்டித் தரலாமே? சின்னச் சின்ன வேலை வாய்ப்புகள்...?''




பற்றி... அதில் உங்கள் நிலை பற்றி...?''

''அ.தி.மு.க.வுக்கு என்றுமே எந்தக் கட்சியின் கூட்டுறவும் அவசியம் இல்லை. தனித்து நின்று வெல்லும் திறமையும் தைரியமும் எங்களுக்கு உண்டு. அவர்களுக்கு வேண்டுமானால் அதில் விருப்பமும் அவசியமும் இருக்கலாம். இருப்பினும் கருத்து சொல்ல நான் யார்? எல்லாம் அம்மாவுக்குத் தெரியும். அவர்கள் பார்த்துக் கொள்வார்கள்!''

- பியார்

# ஆளுநர்-முதல்வர் மோதல்: எதில் போய் முடியும்?

* வி.ஐ.பி. விளக்கம்



● ஆத்மநாதன், மதுரை.

*? அரசு டைரியில் கூட சென்னா ரெட்டி படம் இருக்கக் கூடாது என்பதில் கவனமாக இருக்கிறாரே முதல்வர்?*

! இப்படியெல்லாம் செய்யப் போனால் சென்னாரெட்டிக்கு முக்கியத்துவம் அதிகரித்துவிடும் என்பதைப் பாவம், அவர் புரிந்து கொள்ளவில்லை!

● அ. முஸ்தபா, தக்கோலம்.

*? கே.கே.எஸ்.எஸ்.ஆர். எங்கே?*

! அதானே! காலில் விழுந்தவர், காணாமலே போய் விட்டாரே!

● ஆர். ஆறுமுகம், கொடிமங்கலம்.

*? இந்திய - இலங்கை கிரிக்கெட் தொடரில் இந்திய அணியின் வெற்றி தொடருமா?*

! ஹீரோ கோப்பையை வென்றதின் விளைவாக மெத்தனமாக இருந்துவிட்டால் போச்சு! மேலும் சுறுசுறுப்படைந்தால் வெற்றி தொடர்ந்தாச்சு!

● பி. நூர்தீன், வலங்கைமான்.

*? 'இந்தியா துண்டாடப்படுவதைத் தடுக்க பயங்கரவாதியாக மாறத் தயார்' என்கிறாரே வை.கோ.?*

! அதற்கு முன்னால் கட்சியைத் துண்டாடி விட்டாரே! இதுவே பயங்கரமாத்தான் இருக்கு!

● நாணா, மைலாப்பூர்.

*? பொங்கல் படங்களில் எது தேறும்?*

! தரத்தில் மகாநதி; வசூலில்... அடுத்த வாரம் மறுபடி கேளுங்கள்!

● கே. பட்டு, கும்பகோணம்.

*? டி. என். சேஷன் தனியார் விமானத்தில் காஞ்சிபுரம் வந்தது சர்ச்சையைக் கிளப்பியுள்ளதே?*

! அதற்கான கட்டணமாக ரூ. 95,500 செலுத்தி விட்டதாக அவர் பதிலடி தந்தது சர்ச்சையை அமுக்கிவிட்டதே!

● ஜி.ஜி.கிருஷ்ணன், விசலூர்.

*? புலவர் இந்திரகுமாரியின் ''பாரதி கண்ட புதுமைப் பெண்'' சிறந்த நூலாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது குறித்து...?*

! இதிலென்ன அதிசயம்? தேர்ந்தெடுக்கப்படாமலிருந்தால்தான் செய்தி!

● ஆர். சங்கரநாராயணன், குணசீலம்.

*? இசைஞானி இறங்கி வந்து வைரமுத்துவை மீண்டும் இணைத்துக் கொள்வாரா?*

! ஐயோ! இந்த வாரம் வைரமுத்து விட்டிருக்கும் ஒரு கும்குத்துக்குப் பிறகா? நடக்கிற காரியமா!

## நீங்கள் கேட்டவை - தராசு

● ஏ.எஸ். ராஜ்குமார், மதுரை. ❑

*? தமது முதல்வரிடம் நீங்கள் எதைக் குறித்தாவது வியந்ததுண்டா?*

! ஓ யெஸ்! மரபுகளை அவர் புல்டோசர் செய்வது; தார்மிக நெறிகளைத் தகர்த்து எறிவது; தரும நியாயங்கள் பற்றி கவலைப்படாது இருப்பது - இவையெல்லாம் வியப்பில் என்னை மலைக்க வைத்துக் கொண்டுதானிருக்கின்றன!

● ஆர். கர்ணன், பெத்தரெங்கபுரம்.

*? தி.மு.க.விலிருந்து எம்.ஜி.ஆர். வெளிவந்ததற்கும் வை. கோ. வெளிவந்ததற்கும் என்ன வித்தியாசம்?*

! அது கணக்குக் கேட்ட சமாசாரம்; இது கணக்குத் தீர்க்கும் சமாச்சாரம்!



* வெளியே வந்ததில்...



* ...என்ன வித்தியாசம்?

● அருண் அபிலக்ஷ்மி சங்கர், கோவை.

*? ராஜாஜியின் கொள்கைகளை காங்கிரஸ் ஏற்றுக் கொண்டு விட்டது என்பது சரியா?*

! ஒரு கொள்கையை - சுதந்திரப் பொருளாதாரம் - மட்டும் இப்போதைக்கு சுவீகரித்துக் கொண்டிருக்கிறது. அதையும் படிப்படியாக அமுல்படுத்தி வருகிறது. இன்னும் செய்ய வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. ராஜாஜியின் இதர

* சிறந்த நூல்



* எங்கே, காணோம்?




* மோதல்...


* ...எதில் முடியும்?

பல கொள்கைகளையும் சேர்த்து அமுல்படுத்தினால் தான் புதிய பொருளாதாரக் கொள்கை முழுப் பலன் தரும். பாதிக்கிணறு தாண்டு தல் புத்திசாலித்தனமாகாது.

● மேலைப் பழ நாகப்பன், சென்னை.

*? தடிகை ராதிகாவின் மனம் திறந்த பொங்கல் கவி போட்டி*


* இறங்கி வருவாரா?


* சும் சுத்து!

*பற்றி...?*

! போட்டி கண்டவர் நம்ம ஆள் ஆச்சே! சும்மா சொல்லக் கூடாது; இயல்பா நல்லாவே இருந்துச்சு, இல்லியா?

● எஸ். சீனிவாசன், மதுரை.

*? பக்க விளைவுகளை ஏற்படுத்தும் ஒரு புதிய மருந்துக்கு ஒப்புதல் அளிக்கப் பல முனைகளி லிருந்தும் திர்ப்பந்தம் வந்த தாக ICMR முன்னாள் டைரக்டர் டாக்டர் பைண்டால் கூறியிருக் கிறாரே? அதிர்ச்சி அளிக் கிறதே?*

! இதற்குத்தான் அரசியல் வாதிகளுக்கு 'ஆமாம் சாமி' களாகிவிடாத, சுதந்திர உணர்வும் உறுதியான உள்ளமும் கொண்ட அதிகாரிகள் வேண்டும் என்பது. இன்று எல்லாமே தலைகீழாக மாறிக் கொண்டிருக்கிறதே!

● சா. ரமேஷ் பாபு, லால்குடி.

*? ஷேர் மார்க்கெட் மீண்டும் ஏறுகிறதே, கவனித்தீரா?*

! ம.மோ.சி. எப்படியோ? நான் குறட்டை!

● சீர்காழி வி. ரேவதி, தென்பாதி.

*? வி.ஐ.பி. என்றால் "வேலை இல்லாத பயல்" என்று சேஷன் விளக்கம் தந்திருக்கிறாரே?*

! Very Irritating Person என்றும் கூறலாமே!

● வசந்த ராஜூசெல்வன், பாண்டிச்சேரி.

*? சந்தனக் கடத்தல் வீரப்பனைப் பிடிக்க அரசுக்கு இது வரை ஆன செலவு ஒரு கோடியே 33 லட்ச ரூபாயாமே?*

! பேசாமல் சந்தனக் கடத்தலையே கண்டும் காணாமல் இருந்திருக்கலாம்; நஷ்டம் இதைவிடக் குறைவாகத்தான் இருக்கும் என்று தோன்றுகிறதா? அது தப்பு. அரசு அப்படி அக்கிரமத்துக்கு அடிபணியவே கூடாது. செலவு இன்னும் கொஞ்சம் கூட ஆனாலும் பரவாயில்லை; எப்படியாவது வளைத்துப் பிடித்து விடவேண்டும் என்ற உறுதியோடு சிறப்புப் படையை ஊக்குவிக்க வேண்டும்.

● கே. ஆர். தேவேந்திரன், கொளவட்டம்.

*? ஆளுனர் - முதல்வருக்கு இடையேயான மோதல் எதில் போய் முடியும் என நினைக்கிறீர்கள்?*

! குடியரசு தின விழாவில் கவர்னர் கொடியேற்ற, முதல்வர் அருகிருக்க, பின்னர் இருவரும் மகிழ்ந்து கைகுலுக்கிக் கொண்டால் எவ்வளவு சிறப்பாக இருக்கும் என்று நினைக்கிறேன்! உம்... எனக்கு எத்தனையோ கனவுகள்!

● எஸ். குமார், காரைக்குடி.

*? கேஸ் ஐந்து ரூபாய் விலை குறைப்பு பற்றி?*

! ஒட்டகத்தின் மீது எக்கச்சக்கமாக லோடு ஏற்றி விட்டு பிறகு ஒரு சிறு மூட்டையை அதன் கண்முன் இறக்கித் தரையில் விட்டெறிவார்களாம். ஒட்டகமும் பளு குறைந்துவிட்டதாகக் கருதி எழுந்து ஓடுமாம்! ஆரம்பத்திலேயே பத்து ரூபாய் விலை உயர்த்துவது என்பதுதான் அரசின் திட்டமாக இருந்திருக்கும்! இப்போதெல்லாம் பட்ஜெட் பற்றி பயப்படுவதைவிட பட்ஜெட்டுக்கு முன்பாக அரசு எந்தெந்தப் பொருள்களின் விலைகளை உயர்த்துமோ என்றுதான் அஞ்ச வேண்டியுள்ளது.

● பாலசுப்பிரமணியம், சென்னை - 52.

*? 'புகைப்பட அடையாள அட்டை இல்லாமல் தேர்தல் நடத்த விடமாட்டேன்' என்று சேஷன் சொன்னால் அரசியல்வாதிகள் ஏன் குதிக்கிறார்கள்?*

! அதற்காகக்கூடிய கோடிக்கணக்கான செலவை மத்திய அரசும் சரி, மாநில அரசுகளும் சரி - எப்படி சமாளிப்பது என்பதால் நியாயமான தயக்கம். கள்ள ஓட்டுக்களுக்கு இடைஞ்சலாக இருக்குமே என்பதால் அநியாயமான துள்ளல்.

● எம். ரேவதி, மன்னார்குடி.

*? இவ்வருடத் துவக்கத்தில் நீங்கள் கேள்விப்பட்ட சந்தோஷச் செய்தி?*

! ஓவியர் சில்பியின் சீடர் பத்மவாசன், குருவுக்குப் பெருமை சேர்க்கும் விதமாகச் சிற்ப ஓவியக் கண்காட்சி நடத்தினார் என்பது. அடுத்த தடவை தவற விடாமல் நேரில் காணக் காத்திருக்கிறேன்.


* பொங்கல் எப்பொழுது!

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
ஏ. எஸ். ராஜ்குமார்,
4/499-D, ஆசாத் தெரு,
தாசில்தார் நகர்,
மதுரை - 625 020.

# '94ன் மிகச் சிறந்த ஜோக்!

◆ "குதிரை, கழுதை ஆன கதை" தலைப்பிலான தலையங்கம் கண்டேன். மத்திய அமைச்சர்களின் வெட்கக்கேடான பயத்தை கட்டிக் காட்டியிருப்பதுடன், கர்நாடகாவில் ஆளும் கட்சி அரசியல்வாதிகளின் கவிழ்ப்பு முயற்சிகளையும் தமிழக முதலமைச்சரின் தான் தோன்றித்தனமான போக்கையும் கண்டித்து சரியான முறையில் அறிவுரை வழங்கியுள்ளீர்கள். பாராட்டுக்கள்.

மொரட்டுப்பாளையம், ப. மாரியப்பன்.

◆ 'குதிரை, கழுதை ஆன கதை!' தலையங்கம் கண்டேன். கழுதை கூடப் பொதி சுமக்கும். எதற்கும் லாயக்கற்ற அரசியல்வாதிகள் இப்போது கட்டெறும்பாய்த் தேய்ந்து கொண்டு போகிறார்களே அதை நினைத்தால்தான் வருத்தம். நாட்டுக்கு இவர்களால் இனி ஒரு உபயோகமும் இல்லை என்பது தெரிந்த விஷயம்தான். ஆனால் ஒற்றுமையாகவாவது இருக்கிறார்களா, அதுதான் இல்லை. ஊருக்கு உபதேசம் பண்ணி என்ன பயன்? "நேர்மையாளராக இருந்து மக்களிடையே நல்ல பெயர் வாங்குவது கட்சிக்காரர்களுக்குள்ளேயே பிடிக்கவில்லை" என்பது ரத்தின வரி.

பாண்டிச்சேரி - 3, வசந்தராஜசெல்வன்.

◆ சமூக விரோதிகளைப் பணத்துக்காகக் காப்பாற்றும் வக்கீல்கள் இருக்கும் வரையிலும், இஸ்லாமிய நாடுகளிலுள்ளது போல் தண்டனை அமுல்படுத்தாத வரையிலும், காவல் துறையினர் எவ்வளவு திறமையுடன் செயல்பட்டாலும், ரௌடிகள் சாம்ராஜ்யம் நிலைத்திருக்கத்தான் செய்யும் என்பதில் சந்தேகமில்லை.

தூத்துக்குடி - 1, என். சம்பத்.

◆ புதிதாகப் பிறந்திருக்கிற 1994 ஆண்டில், நாம் சொல்லுவதே மிகச் சிறந்த ஜோக்காக இருக்க வேண்டும் என்பதற்காகவே, சென்னை நகர போலீஸ் கமிஷனர், 'மக்கள் எங்கள் மேல் முழு

## வட்டமேஜை

நம்பிக்கை வைத்திருக்கிறார்கள்' என்கிறார் போலும். இவர்கள் கேட்கும் போதெல்லாம், பேசும் போதெல்லாம் அள்ளி அள்ளி விடுவது புள்ளி விவரங்களைத்தான். ஒரு காலத்தில், இந்தப் புள்ளி விவரங்கள் பூமாரியாகத்தான் வந்து விழுந்தன. இன்று அவைகளே, ஜல்லிக்கற்களாகவும் கூழாங்கற்களாகவும் மாறி விட்டன. கைப்புண் களை நேருக்கு நேராகப் பார்த்துக் கொண்டிருக்கிறோம். ஆனால், போலீஸ் கமிஷனரோ கண்ணாடியைக் காட்டி ஜோக் அடிக்கிறார்!

திருச்சி - 9, கண்ணம்மா இராமசாமி.

◆ படிப்பில், தான் ஒரு சுமார் ரகம்தான் என்று வெளிப்படையாகப் பிரபு கூறியிருப்பதும், அவரது படங்களின் வெற்றி பற்றிய கணிப்பு சினிமா பத்திரிகைகளைவிடவும் சிறப்பான முறையில் தொகுத்த விதமும் இனிமை + அருமை!

அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

◆ பொங்கலுக்கு ரிலீஸாக இருக்கும் புதுப் படங்களை, இன்றைய அரசியல்வாதிகளோடு இணைத்து வழங்கிய உமது கற்பனைக் கார்ட்டூன், வயிற்றைப் புண்ணாக்கிவிடும் அளவு சிரிப்பை வரவழைத்து விட்டது.

கும்பகோணம், எஸ்.கே. மூர்த்தி.

◆ கல்வி புத்தகக் கண்காட்சி ஸ்டாலுக்கு வந்து வி.ஐ.பி.க்களுடன் உரையாட முடியாவில்லையே என்று வருந்தினேன். என்னைப் போன்ற சக வாசகர்கள், வாசகிகள் உரையாடிய நிகழ்ச்சிகளைத் தொகுத்து நீங்கள் வழங்கியதன் மூலம் உரையாடலில் நானும் கலந்து கொண்ட உணர்வினைக் கொண்டேன்.

ஆனைத்தூர், டி. வெங்கட்.

◆ சுப்ரமணியன் ரவிச்சந்திரன் அவர்களின் 'குழந்தை' சிறுகதை கண்டேன். அற்புதம். கண்டிப்பிற்குப் பெயர் போன சித்தப்பாவை எதிர் கொள்ளும் ஒரே தலைமுறையினரின் வெவ்வேறு பார்வைகள் அற்புதமாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. கல்லுக்குள் இருக்கும் ஈரத்தை உணர்ந்த குழந்தை விசாலியின் உளப்பாங்கு அசத்தல்.

திருச்சி - 4, செந்தில் குமார்.

◆ எஸ்.எஸ். மணி பெறப் போவது ஜூ.வி. (ஜூனியர் விகடன்) விருது அல்ல; உரத்த சிந்தனை என்ற அமைப்பு பத்தாயிரிப்பாளர் ஜி.வியுடன் இணைந்து அளிப்பதாகும். ஜி.வியை ஜூ.வி ஆக்கிவிட்டீர்களே!

மதுரை - 9, இரா. கல்யாணசுந்தரம்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# ஸ்ரீ பத்மநாபா பர்மனன்ட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட "நிதி" நிறுவனம்

பதிவு எண் : 18-16755 துவக்கம்: 1989

83, திருவொற்றியூர் நெடுஞ்சாலை, காலடிப்பேட்டை, சென்னை - 600 019.

1. **நிரந்தர வைப்புத்தொகை** (வட்டி ஒவ்வொரு மாதமும் வழங்கப்படும்)

| காலம் | 3 மாதங்கள் | 6 மாதங்கள் | 1 வருடம் | 2 வருடங்கள் | 3 வருடங்கள் | 5* வருடங்கள் |
|---|---|---|---|---|---|---|
| வருட வட்டி விகிதம் | **14%** | **15%** | **17%** | **18%** | **19%** | **20%** |

* 5 வருட வைப்புத்தொகை: குறைந்தபட்சம் ரூ. 25,000 அதற்கு மேலும்

2. **வயதானவர்கள் பென்சன் திட்டம்**

முதியவர்கள் விதவைகள் உடல் ஊனமுற்றோர் மனவளர்ச்சி குன்றியவர்கள், கல்வி, மற்றும் தொண்டு நிறுவனங்கள் முதலியோர்களுக்கு நிரந்தர வைப்பு தொகை ரூ. 10,000 அதற்கு மேலும் காலம் **12** மாதங்கள் வட்டி விகிதம் **19%.**

(வட்டி ஒவ்வொரு மாதமும் அளிக்கப்படும்)

3. **சேமிப்பு (வைப்புத்தொகை வருட வட்டி விகிதம் 9%)**

4. **தொடர்வைப்புத் தொகை**

| ஒவ்வொரு மாதம் செலுத்தும் தொகை | பெறக்கூடிய தொகை 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் |
|---|---|---|---|
| ரூ. 50 | ரூ. 650 | ரூ. 1,400 | ரூ. 2,285 |
| ரூ. 100 | ரூ. 1,300 | ரூ. 2,800 | ரூ. 4,570 |
| ரூ. 500 | ரூ. 6,500 | ரூ. 14,000 | ரூ. 22,850 |
| ரூ. 1,000 | ரூ. 13,000 | ரூ. 28,000 | ரூ. 45,700 |

5. **ஸ்ரீ லட்சுமி கிருபா ரொக்கச் சான்றிதழ்**

ரூ. 250/-ஐச் செலுத்தி 23 வருடங்கள் நிறைவில் ரூ. 17,000/- பெறுவீர்

ரூ. 385/- ஐச் செலுத்தி 5 வருடங்கள் நிறைவில் ரூ. 1000/- பெறுவீர்

ரூ. 580/- ஐச் செலுத்தி 21 வருடங்கள் நிறைவில் ரூ. 40,000/- பெறுவீர்

**ரூ. 500/- ஐம்பது மாதங்களுக்கு முதலீடு செய்தால் ரூ. 1000/- திரும்ப கிடைக்கும்**

**கடன்** தங்க நகைகளின் பேரில் கடன் வழங்கப்படும் வட்டி விதம் ரூ. **1.90**

அலுவலக நேரம்
வார நாட்கள்
காலை 8.00 முதல் 11.00 மணி
மாலை 2.00 முதல் 5.00 மணி
ஞாயிறு காலை 8.00 முதல் 11.00 மணி
பங்குதாரர்களுக்கு மட்டும்

வாரவிடுமுறை நாட்கள்
வெள்ளி மற்றும்
ஞாயிறு மதியம்

**திரு. K.G. ராமதாஸ்**
தலைவர்

